செல்வநாயகி இதனைக் கேட்டு நடுங்கிவிட்டாள். ''ஐயா! என்ன அநியாயம்? இது என்ன அரசாங்கம்? நான் என்ன குற்றம் புரிந்தேன்? அரசனிடம் என்னை அழைத்துச் செல்லுங்கள். நான் நேரில் கேட்டு நியாயத்தைத் தெரிந்துகொள்வேன்'' என்றாள்.

சேவகன் சிறுமியின் இனிய மொழிகளைக் கேட்டு இரக்க முற்றான். அந்த உத்தமப் பெண்மணியை அழைத்துக் கொண்டு அரசனுக்கு முன்னே கொண்டுபோய் விடுத்தான்.

அரசன் கடுகடுத்த முகமும் வெடுவெடுத்த குரலும் உடையவனாய், ''சேவகனே! இவளைக் கொல்லச் சொன்னேனே. ஏன் இங்கே அழைத்துவந்தாய்?'' என்று சினத்துடன் கேட்டான்.

செல்வநாயகி, மன்னவன் கால்மீது வீழ்ந்து, ''தருமகுணமும் தயாள சிந்தையுமுடைய மன்னர் பெருமானே! வணக்கம். தங்கள் ஆளுகையின் கீழ் உள்ள நாங்கள் தங்கள் குழந்தைகள். தாங்கள் எமக்குத் தந்தை. நான் தங்கள் கையில் உள்ள தரும சக்கரத்தின்மீது ஆணையாகச் சொல்லுகின்றேன். மனவாக்குக் காயத்தாலும் அணுத்துணையும் குற்றம் புரிந்தேனில்லை. என்னைக் கொல்லுமாறு கட்டளையிட்ட காரணம் யாது?'' என்று கேட்டாள்.

அவள் இனியசொல் மன்னவன் சினத்தைத் தணித்தது. ''ஏ பெண்ணே! இன்று காலை துயிலைவிட்டு எழுந்ததும் உன் முகத்தில் விழித்தேன். என் தலையில் அடிபட்டு உதிரம் வந்தது, இதோபார், புண்பட்டுவிட்டது. இதுபோல் நாள்தோறும் உன் முகத்தில் விழித்தவர்க்குத் துன்பம் வருமல்லவா? ஆதலால் உன்னைக் கொல்லுமாறு கட்டளையிட்டேன்.'' என்றான் மன்னன்.

செல்வநாயகி சிரித்தாள். ''ஏன் சிரிக்கின்றாய்?'' என்றான் வேந்தன்.

''வேந்தர் வேந்தே! இன்று நான் கண் விழித்தவுடன் முதன் முதலாக இத் தெருவுக்கு வந்தேன். உம்முடையமுகத்தில் தான் விழித்தேன். அதன் பயன் தலை போகின்றது. என்முகத்தில் தாங்கள் விழித்ததால் தங்கட்குச் சிறிது அடிபட்டது. தங்கள் முகத்தில் யான் விழித்ததால் என் தலையே போகின்றது. எனவே என்னைக் கொல்ல உத்தரவளித்தீர். இனி உங்கள் முகத்தில் விழிப்பவர்க்கு இக் கதி வரக்கூடாதே என்று எண்ணிச் சிரித்தேன்'' என்றாள்.

இந்த மொழிகளைக் கேட்ட மன்னன் திடுக்கிட்டுவிட்டான். குழந்தை செல்வியைத் தழுவிக்கொண்டான். ''அம்மா! அறிவின் கருவூலமே! ஆ! ஆ! உனது சொல் என்னைத் திடுக்கிடச் செய்தது. பேஷ். ஆ! இத்தகைய அறிவுடைய பெண்ணைக் காண்பது அரிது. உனக்கு ஆண்டவன் எல்லா



நலன்களையுந் தருவாராக'' என்று வாழ்த்தினான். அன்று தொடங்கி அரசனுடைய ஆதரவில் அவள் கல்வி பயின்றாள். அவளுக்கு உணவு உடை முதலிய அனைத்தும் அரசன் வழங்கினான்.

செல்வநாயகி நன்கு கல்வி பயின்றாள். அரசியல் நீதி நுணுக்கங்களை யெல்லாம் அறிந்தாள். அரசன் அவளைத் தனது ஆட்சிக்கு உட்பட்ட ஒரு நகரில் நீதிபதியாக நியமித்தனன். செல்வநாயகி நீதிபதியாக இருந்து வாதிப் பிரதிவாதிகள் கூறும் வழக்குகளைக் கேட்டு நிறைகோல்போல் நிறுத்து நியாயத்தை வழங்குவாள். அதனால் அவளுடைய புகழ் எங்கும் பரவியது. அவளை அனைவரும் வாயார வாழ்த்தினார்கள். அவளுடைய குண நலனும் மதி நலனும் மிகச் சிறப்புடன் விளங்கின.

அந்த ஊரில் இருமாணவர்கள். அயலூரில் சென்று கல்வி பயின்று திரும்பினார்கள். ஒருவன் **சோமன்**; மற்றொருவன் **ஜெயராமன்.**

சோமன் ஒரு தனவந்தனுடைய மகன். வைரக் கடுக்கன் அணிந்துகொண்டிருந்தான். வரும் வழியில் ஜெயராமன் சோமன் அணிந்திருந்த வைரக் கடுக்கனை வாங்கிப் பார்த்தான். ''சோமா! நன்றாக இருக்கின்றது; மிக்க அழகான கடுக்கன்'' என்று அதனைப் பாராட்டினான். பின்னர் தன் காதில் போட்டுக் கொண்டான். சிறிது தூரம் வந்தவுடன் சோமன் ஜெயராமனைப் பார்த்து ''கடுக்கனைக் கழற்றிக்கொடு'' என்று கேட்டான்.

ஜெயராமன்:— ''சோமா! என்ன விளையாடுகின்றாயா? கடுக்கன் யாருடையது? என்னுடைய கடுக்கனை நீ ஏன் கேட்கின்றாய்? தர முடியாது'' என்றான்.

சோமன்:— ''ஜெயராமா! என்ன இப்படிப் பேசுகின்றாய்? நீ எனது நண்பன் அல்லவா! நாம் எத்தனை நாள் ஒன்றாகப் பழகினோம். உன் புத்தி இவ்வளவு கேவலத்தில் சென்றது பற்றி நான் வருந்துகின்றேன். வேண்டாம். வீண் தகராறு செய்யாதே; கடுக்கனைக் கழற்றிக்கொடு'' என்றான்.

ஜெயராமன்:— ''ஏய்! சும்மா அளக்காதே. சுத்த மோசக்காரனாக இருக்கின்றாய். வீணான விதண்டாவாதஞ் செய்யாதே. உன் கடுக்கன் என்னிடம் ஏன் வருகின்றது? இது என்ன அடாவழக்கு? அடுத்தவர்கள் உடைமைக்கு ஆசைப் படாதே. உன்னுடன் பேச என்னால் ஆகாது. வாயை மூடிக்கொண்டு மரியாதையாகப் போ'' என்றான்.

இப்படிச் சோமனும் ஜெயராமனும் வழக்கிட்டுக்கொண்டு நகரத்தையடைந்து, நீதிபதியாக இருக்கும் செல்வநாயகியிடம் வந்து சேர்ந்தார்கள். ஒவ்வொருவரும் கடுக்கன் தன்னுடையது என்று கூறி வாதிட்டார்கள்.

"இது என்னுடைய கடுக்கன். இவனும் நானும் அயலூரில் சென்று படித்துத் திரும்பினோம். திரும்பி வரும் வழியில் கடுக்கனைக் காணும்பொருட்டுக் கேட்டான். கழற்றித் தந்தேன். இவன் காதில் அணிந்துகொண்டு இல்லையென்று அடாவழக்குப் பேசுகின்றான். உடைமையை உடையவனிடம் சேர்த்து உபகரியுங்கள்" என்றான் சோமன்.

"அறிவு நிறைந்த அம்மா! இவன் கூறுவது சுத்தப் பொய். இவனிடமுள்ள கடுக்கனை நான் வாங்கவேண்டிய அவசியம்யாது? இது எனக்கு சிறுவயதில் என் தந்தை செய்துகொடுத்தது. நெடுங்காலமாக நான் இதனை அணிந்துகொண்டிருக்கின்றேன். இதன் மீதுள்ள ஆசை காரணமாக இவன் என்னுடையது என்று கூறி வீண் வம்பு பண்ணுகின்றான். உண்மைக்குக் காலமில்லை. ஆனால் மதிநலம் படைத்த நீங்கள் உண்மையை உணர்வீர்கள். ஆகவே கடுக்கன் என்னுடையது தான்" என்றான் ஜெயராமன்.

செல்வநாயகிக்கு இரண்டுபேர்கள் கூறுவதில் எது பொய்? எது மெய்? என்று எளிதில் கண்டுபிடிக்க முடியவில்லை. "இப்போது நேரம் அதிகம் ஆகிவிட்டபடியால் தீர்ப்பு நாளைக்குச் சொல்லுவேன். இப்போது நீங்கள் இருவரும் உங்கள் வீட்டுக்குச் செல்லுங்கள். சென்று இளைப்பாறிவிட்டு நாளை காலை 9 மணிக்கு இங்கு வாருங்கள்" என்றாள்.

அதுபடியே இருவரும் தத்தம் வீட்டிற்குச் சென்றார்கள். மறுநாள் காலை 9 மணிக்கு நியாயஸ்தலத்தை யடைந்தார்கள். செல்வநாயகி இருவரையும் நோக்கிப் புன்முறுவல் செய்தாள்.

ஜெயராமனை நோக்கி, "உனது கடுக்கனைக் கழற்றி இங்கே வை" என்று கட்டளையிட்டாள். ஜெயராமன் காதில் உள்ள கடுக்கனைக் கழற்றி நீதிபதியாகிய செல்வநாயகி முன் வைத்தான்.

செல்வநாயகி அதனை எடுத்து, "அன்புள்ள சோமன் அவர்களே! இக் கடுக்கன் உங்களுடையதுதான். ஆகவே இதனைத் தாங்கள் பெற்றுக் கொள்ளவும்" என்று அவனிடம் தந்தாள். தந்தது மன்றி ஜெயராமனைப் பார்த்து, "ஜெயராமா! இந்தக் கடுக்கன் உன்னுடையதன்று. ஏன் நீ வீண் பொய் சொல்லி பழி பாவத்திற்கு ஆளாகின்றாய். இந்த முறை உன்னை மன்னித்தேன். இனி இப்படியான பொய் களவு சூது வாதுகளைச் செய்யாதே ஆகவே திருந்தி நல்ல வழியில் நடந்து தெய்வக் கருணைக்கு ஆளாவாய்; போய்வா" என்று கூறியனுப்பினாள்.

சோமனுக்கும் ஜெயராமனுக்கும் மற்றையோருக்கும் இக் கடுக்கன் விஷயத்தில் செல்வநாயகி உண்மையை எவ்வாறு உணர்ந்தாள்? என ஐயுற்றார்கள். அவளுடைய நுட்பமான அறிவைக் கண்டு மெச்சினார்கள்.



## கடன்

கடன் என்ற சொல் ஒரு சுருங்கிய சொல்தான். ஆனால் அது மிகவும் கடினமானது. பொருட்செறிவு நிறைந்தது. சிந்தனைக்குரிய சொல். ஒருவனிடமிருந்து ஒரு பொருளைப் பெற்றிருப்பானாயின் அவனைக் கடன்காரன் என்று கூறுவர். திருப்பித் தர வேண்டியதற்குக் "கடன்" என்று பேர். கடன் பட்டான் நல்லவனாக இருப்பானாயின் தலையிலே கல் வைத்தது போன்ற ஒரு பெருஞ் சுமையாக இருக்கும். அதனை எப்போது இறக்கிவைக்கலாம் என்ற உணர்ச்சியிருக்கும்.

ஒருநூறு இருநூறு பணம் பெற்றவனே கடன்காரன் என்று வேதனையுறுகின்றான். நமது இந்த உடம்பு விலைமதிக்கமுடியாத மாணிக்கமல்லவா? கைகால்களில் ஏதாவது கெடுதிநேருமாயின் அதனை வெட்டியெடுக்கும் மருத்துவருக்கும் ஐந்நூறு ஆயிரம் சம்பாவனை தருகின்றார்கள். வெட்டியெடுப்பதற்குப்பெருந்தொகை தருவார்களானால் கரங்களையும் கால்களையும் நமக்கு உண்டாக்கித் கொடுத்த இறைவனுக்கு நாம் என்ன தருவது! நம்மால் ஆண்டவனுக்கு என்ன செய்யமுடியும்? ஆண்டவனோ வேண்டுதல் வேண்டாமையிலாதவன். எல்லாம் அவனுடையவை. நமக்குச் சொந்தமானது ஏது?

---

முந்தின நாள் மாலை இருவரையும் வீட்டிற்குப் போகச் சொன்னபின் செல்வநாயகி அறிவுடைய இரு ஒற்றர்களை இருவர்களின் பின்னே அவரறியாவண்ணம் அனுப்பினாள். அங்கே நிகழ்வதை யறிந்து வந்து கூறுமாறு கட்டளையிட்டு அனுப்பினாள்.

சோமன் தன் வீட்டிற்குச் சென்றபோது அவனுடைய தாய் தந்தையர் அவனை அன்புடன் வரவேற்று உபசரித்தனர். "மகனே! உன் காதில் இருந்த கடுக்கன் எங்கே?" என்று கேட்டனர்.

ஜெயராமன் தன் வீட்டிற்குச் சென்றபோது அவனுடைய தாய் தந்தையர், "மகனே! கடுக்கன் ஏது? நன்றாக இருக்கின்றதே? என்ன விலை?" என்று வினவினார்கள். இவ்வாறு இருவர்களுடைய வீட்டிலும் அவர்களின் பிதா மாதாக்கள் கேட்ட கேள்வியை ஒற்றர்கள் மூலம் அறிந்த செல்வநாயகி கடுக்கன் ஜெயராமனுடையதன்று; சோமனுடையதே என்பதைத் திட்டவட்டமாக அறிந்துகொண்டாள். இப்படி இவள் நுட்பமாக அறிந்தாள் என்பதை மற்றவர்கள் அறிய முடியாததுதானே.

இவ்வாறு செல்வநாயகி நுட்பமாக வழக்குகளை அறிந்தும், திட்பமான தெளிந்த அறிவு நலனும் பெற்றும், இனிது தனது அரசியல் அலுவல்களைப் பார்த்தும் புகழ் பெற்றாள். அவளுடைய வாழ்வும் சிறந்தது. நீதி நெறி ஓங்குக.

நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.
எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகர்க்கு.

என்ற திருக்குறளுக்கு நாம் இலக்காகக் கூடாது.

ஆகவே உடம்பையும் உணர்வையும் உரையையும் உரை நிகழ்த்தும் வாக்கையும் காண்கின்ற கண்களையும் கேட்கின்ற செவிகளையும் நமக்குத் தந்த தலைவனை எழுந்தவுடன் ஒருகண நேரமாகிலும் சிந்தித்து வந்திக்கவேண்டும். அது நமது கடன், அக்கடனைத் தராதார்க்கு உய்வு கிடையாது.

இனி இக்கடனைச் செலுத்தும் நல்லடியார்களைக் கைவிடாது காப்பது கருணைக்கடலாகிய இறைவனது கடனுமாகும்.

ஒருவன் ஒரு செடியை நடுவானாயின் அதற்குத் தண்ணீர் விடுவது அவனுடைய முதன்மையாகிய கடமையல்லவா? அது போல் இறைவன் படைத்த இவ்வுடம்பை அவன் காக்கக் கடமைப்பட்டவன். "கடவுளே! என்னைக் காத்தருள்" என்று நாம் ஏன் இறைவனைக் கேட்கவேண்டும்.

நீயே படைத்தவுடல் நீகாப்பை காவென்று
நாயேன் உரைப்பதென்ன ஞாயமோ? —ஆயமறை
சீர்கேட்குஞ் சோணகிரிச் சீமானே வைத்தவரை
நீர்கேட்குமோ மரங்கள் நின்று. —குகைநமசிவாயர்.

கருணைக்கடலே அடியேனைக் காக்கக் கடமைப்பட்ட நீ காவாமல் இருந்தால் வேறு யாருக்காவது அதில் அக்கறை யுண்டாகுமா? என்னைக் காப்பாற்றுவது உனது தலைப்பாரம். தன் தலைச் சுமையைத் தானே இறக்குதல் வேண்டும். அதை இறக்காதிருந்தால் தனக்குத்தானே இடர் என்ற பொருளில் ஒரு பழையபாடல்,

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம்? அறுமுகவா—பூக்குங்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி.

ஒரு முதலாளியின் பணிகளைப் பயன் கருதாமல் ஒரு ஊழியன் புரிந்துவந்தான். அந்த ஊழியனுக்கு ஒரு பேரிடர் நேர்ந்தது. அந்த இடரையகற்றுவது அந்த முதலாளியின் கடனல்லவா? அதுபோல் "முருகா அடிமையேன் உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்; நீயே கதி என்று நினைந்து நினைந்து துதி செய்து நின் திருவடித்தொழும்பு புரிகின்றேன். அங்ஙனம் புரிகின்ற அடியேனைக் காப்பது **"உன்கடன்"**.

"கலியாண சுபுத்திரனுகக்
குறமாது தனக்குவிநோதக்
கவினுரு புயத்தில் உலாவி விளையாடிக்
களிகூரும் உனைத் துணைதேடும்
அடியேனை சுகப்பட வேவை
கடனுகும் இது கனமாகு முருகோனே"

ஆகவே நாம் ஒவ்வோருவரும் இறைவனைச்சிக்கேனப் பிடித்துக் கோள்ளவேண்டும். "உள்ளேன் பிறதேய்வம் உன்னையல்லா தேங்கள் உத்தமனே" என்ற திருவாக்கின்படி அவன் திருவடியை உறுதியாகப் பிடித்துக்கோள்ள வேண்டும். அதற்கு **"மார்க்கட நியாயம்"** என்றுபேர். குரங்குக்குட்டி தாயைப் பிடித்துக் கோள்வதுபோல் என அறிக.

பின்னர் இறைவன் தன்னைப் பிடித்துக்கோண்ட உத்தம ஆன்மாவைத் தளரவிடாது தாங்கிக் கோள்வான். அதற்கு **"மார்ஜால நியாயம்"** என்று பேர். தாய்ப்பூனை தன் குட்டிகளைப் பிடித்துத் தூக்கிக் கோண்டு போகும் அதுபோல்.

தன்னை நம்பிய நல்லடியாரையாள்வது இறைவனது கடன் என்பதையும் இதனுல் உயர்த்துணர்க.

"தன்கடன் அடியேனையுந் தாங்குதல்
என்கடன் பணி செய்து கிடப்பதே"

---

## ஆதிவயலூர் வேண்பா அந்தாதி.

காப்பு

திங்க ளணிசடையார் சேயாந் திருவயலூர்
துங்க முருகன் றுணைத்தாட்கே—இங்கிதமாச்
சேந்தமிழ்வேண் பாவாற் றிகழுமந் தாதிசோல்க்
கந்தனேடு யானைமுகன் காப்பு.

தந்தையார்—துதி

கந்தன் வயலூரான் கான்மலர்க்குக் காதலோடு
சேந்தமிழின் வேண்பாவாற் சீரியதா—முந்துறுமந்
தாதிசோலத் தந்தை தமிழமிர்த நாவலன்ருள்
ஓதிமனம் போற்று முவத்து.

நூல்.

பூமாதி னின்முகமேன் போற்பார் வயலூரில்
நாமா திசைக்கவளர் நற்றேவே!—மாமாதின்
நன்மருகா! இன்முருகா! நாயேன் மனத்தகத்
தின்மறுகா தின்பத் திரு.

உ
முருகா

## உயிர்க் கருணை

ஒரு வீடு இன்றி நாம் வாழ முடியாது. அந்த வீடும் விசாலமானதாய், நல்ல தண்ணீர் வசதியும் சுற்றி நந்தவனமும் பழமரங்களும் காற்ரேட்டமும் உடையதாய் இருந்தால் மிகுந்த நன்மையாக இருக்கும். இத்தகைய வசதியுள்ள வீட்டைக் கேட்டியான பூட்டை அமைத்துப் பூட்டி யிருக்கின்ருர்கள். அப்போழுது அதனைத்திறந்து அதில் மகிழ்ச்சியாகக் குடியிருக்க வேண்டுமானுல் திறவுகோல் வேண்டுமல்லவா?

மோட்சவீடு என்ருல் அது எத்துணையருமையுடையது. அங்கே எல்லா வசதிகளும் உண்டல்லவா? அந்த மோட்ச வீட்டை விரும்பாத ஆன்மாக்கள் இருக்கமுடியாதுதானே. அந்த முத்திவீட்டிற்கு ஒரு திறவுகோல் வேண்டாமா? அதனை நாம் பேற்றுக் கோண்டால்தானே, இந்த உடம்பை விட்டு அங்கு போகும்போது திறவுகோலையிட்டுப் பூட்டைத்திறந்து அந்த முத்தி வீட்டிலே சித்தியுடன் வாழலாம். அதற்குத் திறவுகோல் எது?

உயிர்கள் மீது வைக்கின்ற கருணையாகிய ஜீவகாருண்யந் தான் முத்திவுலகிற்குத் **திறவுகோல்.**

ஆதலால் மன்னுயிர்களைத் தன்னுயிரைப் போல் பார்க்க வேணும். எல்லா உயிர்களும் ஈசன் கோயில். ஆகவே எந்த உயிர்களையும் கோல்லக்கூடாது.

ஆனை அடியில் அடங்காத அடி கிடையாது. அதுபோல கோல்லாமை யேன்ற அறத்தில் அடங்காத அறமும் கிடையாது.

ஒன்ருக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

என்கின்ருர் திருவள்ளுவர்.

ஒவ்வோருவரும் பிறவுயிரைக் கோன்று அருந்தும் கோடிய பழக்கத்தைத் தவிர்த்துவிடவேண்டும். அவ்வாறு கோல்லா விரதந்தை மேற்கோள்வாராயின் அவர்கள் வேறு தவம் புரிய வேண்டாம். தானம் புரிய வேண்டாம். தருமம் புரிய வேண்டாம். ஆண்டவன் அருள் தானே வரும்.

அதனுல்தான் தாயுமானுர்,

"கொல்லா விரதம் குவலயம் எல்லாம்ஓங்க
எல்லார்க்கும் சொல்லுவது என்இச்சை பராபரமே"

என்கின்ருர்.

நமது உடம்பில் ஒரு முள் குத்தினுல் எத்துணை வேதனை உண்டாகின்றது. சவுளம் புரிந்து கோள்ளும்போது சிறிது

கத்தியினுல் சிறுதோல் சிதைந்தால் எத்துணைத் துன்பம் உண்டாகின்றது. நன்கு கவனியுங்கள். கத்தியை வைத்து ஆடு, கோழிகளை அறுக்கும்போது அந்த வாயில்லாத உயிர்கள் துள்ளித் துடிக்கு மல்லவா? அப்படி அவைகளைக் கோன்று தின்ருல் பதினுயிரம் ஆண்டு வாழ முடியுமா?

மனித வாழ்க்கைக்கு மரக்கறி உணவு போருந்தியது. போதிய வலிமை அந்த மரக்கறி உணவிலே கிடைக்கின்றது. புலால் உணவினுல் நிரம்ப வலிமை யுண்டாகின்றது என்று எண்ணுகின்ற எண்ணம் பிழையானது.

புல் தின்கின்ற ஆட்டுக்கும், வைக்கோல் உண்ணுகின்ற மாட்டுக்கும், தழை தின்கின்ற யானைக்கும் வலிமையில்லையா? யானை சைவ ஆகாரம் அருந்துகின்றது. அதற்குள்ள வலிமையை அளக்க முடியுமா?

இனி, சைவவுணவு உண்கின்ற ஆடு, மாடு, யானை, மான் முதலியவைகள் சாதுவாகவும் கூட்டம் கூட்டமாகவும், ஒற்றுமையாகவும் வாழ்கின்றன.

புலால் உண்ணுகின்ற நாய், நரி, புலி, சிங்கம் முதலிய உயிர்கள் கோடியவைகளாகவும் ஒற்றுமை யின்றியும் இருக்கின்றன.

மாட்டுமந்தை ஆட்டுமந்தை முதலியவைகளைக் காண்கின்ருேம். புலிமந்தை நாய்மந்தை என்று ஒன்றைப் பார்க்கின்ருேமா? இரு நாய்கள் ஒன்று கூடமாட்டா. ஏன்? உணவினுல் வரும் கோடுமை.

இந்த உடம்பை வளர்ப்பதற்கு இன்னுெரு உடம்பை வேட்டியுண்பது கோடுமையிலும் கோடுமை. அவர்கள் கருணை எங்ஙனம் பேறுவர்? என்கின்ருர் வள்ளுவர்.

**தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன்உண்பான்**
**எங்ஙனம் ஆளும் அருள்?**

புல் தின்கின்ற மாடு ஆடுகளுக்குப் பற்கள் தட்டையாக இருக்கின்றன. புலால் உண்ணுகின்ற உயிர்களாகிய புலி கரடி சிங்கம் நாய் நரி முதலிய உயிர்கட்குப் பற்கள் கூர்மையாக இருக்கின்றன. மனிதனுடைய பற்களும் மரக்கறி உண்பதற்கு ஏற்றதாகவே தட்டையாகப் படைக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் குறிப்பினுல் மனித வாழ்க்கைக்குப் புலால் உணவு ஏற்றதன்று.

இனி அதனை உண்கின்றவர்களே அங்கிய பதார்த்தம் என்கின்ருர்கள். அது சோந்த பதார்த்தம் அன்று. அதனைச் சமைக்கும் ஏனங்கள், அரிவாள்மணை, கரண்டி, இரும்புச் சட்டி எல்லாம் வேருக வைத்திருப்பார்கள். கார்த்திகை, அமாவாசை



முதலிய நல்ல நாள்களில் சமைக்கும் ஏனங்கள் வேறு. வாயும் வயிறும் ஒன்றுதானே. அமாவாசை கார்த்திகைக்கு ஒரு வயிறு! அன்னிய பதார்த்தத்திற்கு ஒரு வயிறு என்ரு உளது? வாயும் வயிறும் ஒன்று. ஏனங்கள் மட்டும் வேறு வேறு என்ருல் அது போருந்துமா?

**ஆமுயிர் கொல்லார் மேலோர் அறிவினையறிந்த நல்லோர்**
**தீமனம் அடக்கவல்லார் இவர்களே தேவராவார்**
**காமராய்க் கற்பழித்தோர் களவுசெய் துடல் வளர்த்தோர்**
**மாமிசந் தின்போ ரெல்லாம் மானிடப் புலையர்தாமே.**

என்பது வள்ளலார் சாத்திரம்.

கோல்லாமையை மேற் கோண்டார்க்குத் தேய்வத் திருவருள் என்றும் நின்று துணை புரியும். அவர்கட்கு எல்லா நலன்களும் உண்டாகும். அவர்களைப் புண்ணியவுலகில் அமரர்கள் வரவேற்று உபசரிப்பார்கள்.

**"கொல்லா விரதியர்நேர் நின்ற முக்கட் குருமணியே"**

என்கின்ருர் தாயுமானுர்.

பிறவுயிரைக் கோன்று தின்போர் கங்கை முதலிய நதிகளில் முழுகினுலும், கடவுளைப் பூசித்தாலும், மேகம் போல் நிரம்ப அள்ளிக் கோடுத்தாலும், பலப்பல ஞான சாத்திரங்களைப் படித்தாலும் நரகஞ் சேர்ந்து நலிவுறுவார்.

**கங்கையில் படிந்திட்டாலும் கடவுளைப் பூசித்தாலும்**
**மங்குல்போல் கோடிதானம் வள்ளலாய் வழங்கிட்டாலும்**
**சங்கையில்லாத ஞான சாத்திரம் உணர்ந்திட்டாலும்**
**பொங்குறு புலால் புசிப்போன் போய் நரகடைவன் அன்றே.**

—வள்ளலார்.

**"நோன்பென்பது கொன்றுதின்னுமை"**

—ஔவையார்.

**கொல்லாமல் கொன்றதைத் தின்னுமல் குத்திரங் கோள்களவு**
**கல்லாமல் கைதவரோ டிணங்காமல் கனவிலும் பொய்**
**சொல்லாமல் சொற்களைக் கேளாமல் தோகையர் மாயையிலே**
**செல்லாமல் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே.**

—பட்டிணத்து சுவாமிகள்.

ஆதலால் கடைத்தேறவேண்டும் என்ற கருத்துடையார் ஒவ்வொருவரும் புலால் உணவை ஒழித்து சுத்த சைவ உணவை உண்டு சாந்த சீலர்களாக ஒழுகுவார்களாக. தங்கள் குழந்தைகளுக்கு அந்த உணவைக் கற்றுக்கோடாமல் பின் வருகின்ற சந்ததி சைவ நலம் உடையவர்களாகச் செய்க. முத்தி உலகிற்கு முதற்படி கோல்லாமையேயாகும். முத்தி வீட்டிற்குத் திறவுகோல் உயிர்க் கருணையே யாகும்.

உ
முருகா

# தோத்திரம்

(கசச-பக்கத் தொடர்ச்சி)

அவரைப் புகழ்வதனுல் எப்படி வாழ்ந்து உய்யலாம் எனின், கூறுவாம். மனிதர்களாற் செய்யப்படும் கடவுள் வழிபாடு மனம் வாக்கு காயம் என்னும் மூன்றினுற் செய்யப்படும். இம்மூன்றனுள் காயத்தாற்செய்யப்படும் தொண்டுகளைக் காட்டிலும் வாக்கினுற் செய்யப்படும் தொண்டும், வாக்கினுற் செய்யப்படும் தொண்டைக்காட்டிலும் மனத்தாற் செய்யப்படும் தொண்டும் அதிகபலனைத்தருவனவாம். திருவலகிடுதல் முதலியன காயத்தாற் செய்யப்படுவன. பாடற்ருேண்டு வாக்கினுற் செய்யப்படுவது. ஆதலால் தோத்திரஞ் செய்தலாகிய பாடற்ருேண்டு திருவலகிடுதல் முதலிய காயத் தொண்டுகளைக் காட்டிலும் அதிக பலனைத் தருவதாம். காயத்தொண்டுகள் செய்தற்கு அதிக அறிவு விளக்கம் வேண்டுவதின்று. பாடற்ருேண்டு செய்தற்கு அறிவு விளக்கம் மிகவும் வேண்டும். இறைவனுருடைய அளவுபடாத பெருமைகளையும், ஆன்மாக்களின் சிறுமைகளையும், அவர் ஆன்மாக்களுக்கு அருள் செய்யும் பிரபாவங்களையும் உணர்ந்தவர்களே மனங்கசிந்து அவரைப் புகழ்ந்து போற்றற்குரியராவர். அன்றியும், மனங்கசிந்துருகாதபோது கடவுள் வழிபாட்டினுல் மிகுந்தபலன் உண்டாகாது. மனமானது இசையால் உருகும் இயற்கையுடையது. ஆதலால், இசையோடுகூடிய பாடல்களால் கடவுளைத் தோத்திரஞ்செய்வதனுல் மனம் உருகி அன்பு பெருகும். மேலும், சிவபெருமானை வேதம், ''ஸ்வரமயன்'' என்று கூறுகின்றது. தமிழ்வேதமும் ''மிக நல்ல வீணை தடவி''

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

நம்மினும் 'தாழ்ந்த உயிர்களிடம் நாம் கருணை காட்டினுல், ஆண்டவன் நம்மிடம் கருணை காட்டுவான். கருணையைக் கருணையினுலேயே பெறவேண்டும்.

ஒரு தும்பியின் வாலைக் கிள்ளி முள்ளைச் சொருகிய பாவத்திற்காக மறு பிறப்பில் மாண்டவ்யர் கழுவில் கிடந்து துன்பமுற்ருர்.

பன்னிரண்டு நாள் பசுங்கிளியின் சிறகையறிந்து கூட்டிலடைத்த பாவத்திற்காகக் கோபன்னு பன்னிரண்டு ஆண்டு சிறையில் கிடந்து கடுந்துன்பம் அநுபவித்தார்.

ஒரு புருவுக்காக உடல் தசையை அறுத்துக் கொடுத்த பாரதநாட்டில் எல்லோரும் அகிம்சாதருமத்தை மேற்கொண்டு உயிர்களிடம் கருணை செய்து இம்மையில் புகழும் மறுமையில் புண்ணியமும் பெறுவார்களாக.



எனவும், ''ஏழிசையாய் இசைப்பயனுய்'' இருப்பவன் என்றுங் கூறுகின்றது. பின்னும், பாட்டானது பாடுவார் மனத்தை மாத்திர மன்றி கேட்போர் மனதையும் உருக்க வல்லது. இது பற்றியே நமது சமயாசாரியர்கள் பாடற் ருேண்டைக் கடைப் பிடித்து தேவாரத் திருமுறைகளைப் பாடியருளி உலகை வாழ் வித்தார்கள்.

இதுவரையிற் கூறியவற்ருல் சிவபெருமான் தோத்திரப் பிரியர் என்பதின் கருத்தும், தோத்திரஞ் செய்தற் ருேண்டின் சிறப்பும் விளங்கும்.

இக்காலத்தில் பலர் கோயில்களைக் கட்டுகிருர்கள்; நந்தன வனம் வைத்து புட்ப கைங்கரியங்கள் செய்கின்ருர்கள்; மகோற்சவம் அபிடேகாதி யுபசாரங்கள் செய்விக்கிருர்கள்; வாயாரப் பாடி தோத்திரம் செய்கிருர்கள். ஆனுல், இறைவனுரை அரியராயிருக்கின்றனர். இதற்குக் செய்வாரும், செய்விப்பாரும் தோத்திரஞ்செய்தற்கு அத்யாவசிய காரணம் நம்மவர்களுக்குத் இல்லாமையேயாம். ஆதலால் பலர் ஆலயங் மான கல்வி யறிவு இன்னது செய்வதென்று தெரியாமல் களுக்குப் போய் தாம் தேங்காய் பழம் முதலியன கொடுத்து ஊமரைப் அர்ச்சகரிடத்தில் படித்துப் பாடக் கற்றிருந்தும் போல் நிற்கிருர்கள். சிலர் கூசுகிருர்கள். சிலர் வாய்திறந்து வாயாரத் தோத்திரஞ் செய்யக் எண்ணுகிருர்கள். பலர் பாடுவதைக் கௌரவக் குறைவாக இன்ன இன்ன தோத்திரங் இன்ன இன்ன தெய்வங்களிடத்தில் யறியாமல் தங்கள் வாயில் களைப் பாடல்வேண்டுமென்பதை பாடுகின்ருர்கள். பல மாதரைக் வந்த பாட்டை யெல்லாம் ஒருவன் சிவ சன்னிதியில் நின்று கூடித் தூர்த்தனுய்த் திரியும் கோங்கையர் சேர்மனையிற் சேரோம்'' கொண்டு, ''வாராண்ட பாடுகிருன். திருநீறு பூசக் என்னும் திருத்தாண்டகத்தைப் திலதமிட்டுக் கொண்டிருக்கும் கூசிப் புனுகு ஜவ்வாது கலந்த நிகழப்பெற்ருேம்'' என்று பாடு ஒருவன், ''நீறணியுங் கோலமே அழுந்தி இரவும் பகலும் பல வழி கிருன். குடும்பச் சேற்றில் பாதுகாப்பவன், ''உற்ருரை யான் யிலும் பொருளைத் தேடி பேர் வேண்டேன்'' என்று பாடு வேண்டேன் ஊர் வேண்டேன் உபாத்தியாயரிடத்தில் சிறுபோதில் கிருன். ஒருவன் தான் கோம்பாகிக் காட்டகத்தே ஒப்புவித்தது போல், ''கவையாகிக் மரங்கள்-சவை நடுவே, நீட்டோலை நிற்கும், அவையல்ல நல்ல மாட்டா தவனன் மரம்'' என்பன வாசியா நின்ருன் குறிப்பறிய, பாட்டுகளைப் பாடுகின்ருன். காதலாகிக் வாதியாய நீதிநூற் தோத்திரஞ் செய்வாரைக் காண்பது கசிந்து கண்ணீர் மல்கி சிவபெருமானிடத்தில் மெய்யன்பு செலுத்த அரிதாயிருக்கிறது. பிரபாவங்களை விளக்கும் நூல்களைக் விரும்புவோர் அவருடைய தோத்திரஞ் செய்தல் வேண்டும். கற்று அவரை வாயாரத்

அவர் பெருமைகளைக் கல்லாதபோது அவரை வாயார வாழ்த்துவதும், வாழ்த்தியவருளைப் பெறுதலும் கூடாமையாம். இது பற்றியே தமிழ்மறை ''கல்லா நெஞ்சில் நில்லா னீசன்'' எனவும், ''கற்றவர் விழுங்குங் கற்பகக் கனி'' என்றும் அருளிச் செய்தது.

மனிதர்கள் தாம் உய்தற்குச் சிவபெருமானை வாயார தோத்திரஞ் செய்தல் அவசியமாதல் போல், உலகம் உச்சீவித்தற்கு சனங்களுக்கு ஞான நூல்களைக் கற்பித்து இறைவனை யேத்தச் செய்தலும் அத்தியாவசியமாம். இதனை இக் காலத்துச் சைவப் பெருமக்கள் உணராமலும், உணர்ந்த விடத்துக் கவலையில்லாமலும், வாளாயிருப்பதனுல், சைவர்கள் எண்ணிறந்தோர் சமயக் குருடர்களாகவும் ஊமைகளாகவும் இருக்கின்ருர்கள். ஆதலால் இனியாவது சிவபுண்ணிய பரிபாலனம் செய்யும் சைவப் பெருமக்கள் பல விடங்களிலும் பாடசாலைகள் வைத்துக் கல்வி கற்பித்து சனங்கள் சிவபெருமானை வாயாரத் தோத்திரம் செய்யுமாறு செய்தல் வேண்டும். இப்போது நடக்கும் உற்சவாதிகளில் சனங்கள் சுவாமிக்கு சாத்தும் ஆடையாபரணங்களைப் பார்த்தும் புட்பமாலைகளைப் பார்த்தும் தீவட்டி மத்தாப்பு முதலியவைகளைப் பார்த்துமே சந்தோஷித்துப் போகின்றனரே யன்றி இறைவருடைய பெருமையைச் சிந்தித்துச் சிந்தித்து நெக்கு நெக்குருகிப் பாடுகின்ருரல்லர். ஆதலால் சைவப் பெருமக்கள் சிலர் பெரும் பொருளைச் செலவிட்டுச் செய்யும் கைங்கரியங்கள் பலவும் அவற்ருல் சனங்கள் அடையக்கூடிய பலன்கள் அவ்வளவும் கொடுப்பனவாயில்லை. ஆதலால் உலகம் உய்யவேண்டி பதி புண்ணியம் செய்ய விரும்பும் சைவப் பெருமக்கள் எங்கும் பாடசாலை வைத்து அவைகள் மூலமாய் சனங்கள் எங்கும் தனித்தனியாகவும் கூட்டம் கூட்டமாய்க் கூடியும் சிவபெருமானை மனங்கசிந்து வாயாரத் தோத்திரம் செய்யுமாறு செய்தல் வேண்டும். இப்படிச் செய்தலே மற்றெல்லாவித கைங்கரியங்களினும் பன்மடங்கு மேலான கைங்கரியமும் தங்கள் கடமையுமாம் என்பதை மறக்கலாகாது.

ஆடுகின்றிலை கூத்து உடையான் கழற் கன்பிலை யென்புருகிப்
பாடுகின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடுகின்றிலை தெருவுதோறலறிலை செய்வதொன் றறியேனே.

—திருவாசகம்.

---

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம் ''

மலர் 21 | துன்முகி ஆண்டு மார்கழித் திங்கள் டிசம்பர்-1956 | இதழ் 9

## திருப்புகழ்

### திருச்செந்தூர்

விதிபோலு முந்த விழியாலு மிந்து
நுதலாலு மொன்றி இளைஞோர்தம்
விரிவான சிந்தை உருவாகி நொந்து
விறல் வேறு சிந்தை வினையாலே
இதமாகி யின்ப மதுபோத வுண்டு
இனிதாளு மென்று மொழிமாதர்
இருளாய துன்ப மருள்மாயை வந்து
எனையீர்வ தென்றும் ஒழியாதோ
மதிசூடி யண்டர் பதிவாழ மண்டி
வருமால முண்டு விடையேறி
மறவாத சிந்தை அடியார்கள் பங்கில்
வருதேவ சம்பு தருபாலா
அதிமாய மொன்றி வருசூரர் பொன்ற
அயில்வேல் கொடன்று பொரும்வீரா
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவாயு கந்த பெருமாளே.

உருவமாகித் தோன்றி நின்று, மனம் நொந்து, தமது சாகசத் திறலால் மனம் வேறு செயல் வேருக இருந்து, இனிமையான இன்பத்தேனை மிகவும் அருந்தி என்னையாளும் என்று கூறுகின்ற விலைமகளிருடைய இருள் மயமான துன்பமும், மதியை மயக்கும் மாயையும் வந்து எளியேனை ஈர்க்கின்ற தன்மை எக்காலத்தும் நீங்கமாட்டாதோ?

## விரிவுரை

**விதி போலு** முந்த வழியாலும்:—

விதி போலும் உந்து அ விழியாலும் எனப் பதப் பிரிவு செய்து கொள்க. முன் செய்த ஊழ் வினை எவ்வாறு தவிராது தொழில்புரியுமோ அவ்வாறு விலைமகளிரது கண்களும் முற்பட்டு மாயவினைகளைப் புரியும்.

**இந்து நுதலாலும்:**—

இந்து—சந்திரன். நுதல்—நெற்றி. எட்டாந் திதியன்று தோன்றும் பாதிமதியைப் போல் நெற்றி வட்டமாகவும் வடிவாகவும் இருக்கும். அதனால் மகளிருடைய நெற்றியை மதிநுதல் என்று புலவர் புகழ்ந்து புகலுவார்.

**இளைஞோர் தம் விரிவான சிந்தை உருவாகி:**—

தம்மை விரும்பி வருகின்ற இளைஞர்களுடைய உள்ளத்தில் மனோசக்தியால் உருவமாகி நின்று விலைமகளிர் காட்சி தருவர்.

அவா மிகுதியினால் தாம் விரும்பிய உருவத்தை மிகுதியாக அழுந்திய நினைவுடன் எண்ணுவதனால் அவ்வுருவம் அவர்களுடைய மனதில் தோன்றுவதுடன், சிலசமயம் புறக்கண்ணுக்கும் தோன்றும்.

இராவணன் சீதையை மிகுதியாக நினைந்து நின்றனன். அதனால் அவன் கண்முன் சீதையின் உருவம் வந்து நின்றது.

சூர்ப்பணகை இராமர்மீது காதல் கொண்டு இராமரையே நினைந்து நின்றாள். அவள் முன் இராமர் திருவுருவம் வந்து நின்றது.

இராவணன் சூர்ப்பணகையை அழைத்து, "தங்காய்! இதோ பார். வாள்போன்ற கண்களும் மயில்போன்ற மேனியும் உடையவளாக வந்து நிற்கின்ற இவள்தானே சீதை? என்று வினவினான்.

பொய்ந்நின்ற நெஞ்சிற் கொடியாள் புகுந்தானை நோக்கி
நெய்ந்நின்ற கூர்வாளவன் நேருற நோக்கு நங்காய்
மைந்நின்ற வாட்கண் மயில்நின்றென வந்தென்முன்னர்
இந்நின்றவளாங்கொல் இயம்பிய சீதை என்றான்.

முடியாது பெரும்வேதனையுறுவர். அதுபோல் ஆசையால் வரும் மயக்க இருளும் நல்வினை தீவினை என்ற விளக்கத்தைமறைக்கும். நல்லவை செய்ய விடாது அல்லவை செய்விக்கும். புண்ணியச் செயல் கசக்குமாறும், பாவச் செயல் இனிக்குமாறுஞ் செய்யும். அதனால் பெருந்துன்பம் நேரும்.

**மருள் மாயை வந்து:—**

மயக்கத்தைப்புரியும் மாயையும் வந்து சூழும்; மாயையில் நின்று மயங்குவோர் பரகதி காணார்.

**எனை யீர்வதென்றும் ஒழியாதோ:—**

ஈர்வது—ஈர்த்தல்—இழுத்தல்.

"ஈர்த் தென்னையாட் கொண்ட எந்தை பெருமானே" —திருவாசகம்.

" மகளிரது மாய மயக்கம் வந்து அடியேனை ஈர்த்துத் தன் வசமாக்கித் துன்பம் புரியும். இந்த இடர்ப்பாடு என்னைவிட்டு என்று நீங்குமோ? இறைவனே! இந்த இடரினின்றும் சிறியேன் விடுபட்டு உய்ய அருள்புரிவீர்" என்று அடிகளார் மகமாயை களைந்திட வல்ல பிரானாகிய முருகனை வேண்டுகின்றனர்.

ஈர்வது என்ற சொல்லுக்குப் பிளத்தல் என்றும் பொருள் கொள்ளலாம்.

**மதிசூடி:—**

தட்சனுடைய சாபத்தினால் தேய்ந்த சந்திரன் எங்கும் அடைக்கலம் இன்றி அரனார்பால் வந்து அடைக்கலம் புகுந்தனன்; கருணை நிறைந்த கண்ணுதற் கடவுள் தேய்ந்த மதியை எடுத்துத் தமது சென்னியிற் சூடியருள்பாலித்தனர்.

**அண்டர் பதிவாழ மண்டி வருமால முண்டு:—**

பாற்கடலில் பிறந்து அமரலோகத்தை யழிக்கவந்த ஆலா கலவிடத்தை இறைவன் உண்டு அமரர்கட்கு அமிர்தம் வழங்கி அருள்பாலித்தனர். இல்லையேல் அமரர் அனைவர்களும் அன்றே போன்றி அந்நாடு அழிந்திருக்கும்.

**மறவாத சிந்தை அடியார்கள்:—**

அடியவர்கள் எப்போதும் இறைவன் திருவடியை மறவா திருக்கும் பேற்றியுடையவர்கள். இந்த நிலையை அவர்கள் ஆண்டவனிடமும் வேண்டிப் பெறுவார்கள். "மீண்டும் பிறப் புண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும்" என்று வேண்டுகின்றார் காரைக்காலம்மையார். "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே வழுவாதிருக்க வரந்தரல் வேண்டும்" என்கின்றார் அப்பர்.

"பெருமானே! தேவர்,மனிதர், விலங்கு,பறவை,ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்ற இந்த ஏழுவகைப் பிறவிகளில் எந்தப்

நாரதர் "பெருமானே! இன்னொரு வரத்தைக் கேட்கின்ற கெட்ட புத்தி வராமல் இருக்கவேண்டும்" என்று கேட்டனர்.

**அடியார்கள் பங்கில்வரும் தேவ சம்பு:—**

அடியார்களுடைய அருகில் இறைவன் வந்து அவர்கள் சிந்தையில் நினைந்த திறங்களையெல்லாம் வழங்கி ஆட்கொள்ளுவான்.

தேவன்—ஒளியுருவினன்.

சம்பு—சுககாரணன்.

**அதிமாய மொன்றி வருசூர்:—**

சூராதியவுணர்கள் பலப்பல மாயவடிவங்களைக் கொண்டு போர் புரிந்தார்கள். மலையாகவும் கடலாகவும் இருளாகவும் கனலாகவும் இன்னும் பல்வேறு வடிவங்களைத் தாங்கிப் போர் புரிந்த அவர்களைக் கந்தவேள் வேற்படையால் அழித்தருளினர்.

**அழகான செம்பொன் மயில் மீது:—**

பறவைகளில் மயில் மிகுந்த அழகியது. பொன் வண்ணமான நிறத்துடன் விளங்குவது.

"செம்பொன்மயில் மீதிலே எப்போது வருவாயே"
—திருப்புகழ்.

**அலைவாய்:—**

கடல் அலைவீசும் இடத்தில் விளங்குவதனால் திருச்செந்தூருக்கு "அலைவாய்" என்றபேர் அமைந்தது. அது இரண்டாவது படை வீடு. சுவாதிஷ்டானத் தலம்.

## கருத்துரை

சிவகுமாரரே! சூரசங்காரரே! செந்திலாண்டவரே! மாதர் மயக்கிலிருந்து விடுபட்டு உய்யுமாறு அருள்புரிவீர்.



# கற்பு

"மாதரசி"

திருத்தணி என்பது முருகனுக்குகந்த திருத்தலம். ஐந்தாவது படைவீடாகிய குன்றுதோருடலில் தலைசிறந்த தலம். "புவிக்குயிராகிய தணிமலை" என்பார் அருணகிரிநாதர். அடியார்களது வினைகளைத் தணிக்க வல்ல தலம் ஆதலின் தணிகை என்று பேர் பெற்றது. மிகுந்த மகிமை வாய்ந்த திவ்யத்தலம்.

இத்திருத்தலத்தில் அந்தணர் மரபில் வந்தவர் **"சிவராஜ குருக்கள்"**. அவர் சிறந்த முருகபக்தர். நல்லறங்கள் பல புரிவார். இன்னுரையே பகர்வார். கருணை நிறைந்த மனம் படைத்தவர். ஒழுக்கத்தை உயிரினும் மேம்பட்டதாக எண்ணும் உத்தம சீலர். வேதாகமங்களில் வல்லவர். கூர்த்த மதிநலம் படைத்தவர். சிறப்பாக ஜோதிட நூலில் மிக்க தேர்ச்சி பெற்றவர். பலருக்குப் பொருள் விரும்பாமல் ஜாதகங்களைப் பார்த்தும் பலாபலன்களைச் சொல்லியும் ஆருடங்கள் சொல்லியும் உபகரிப்பர். மலரை நாடி வண்டுகள் செல்வதுபோல் பலர் அவரை விரும்பி வந்து பல சந்தேகங்களைக் கேட்டுத் தெளிவு பெறுவார்கள். நடு ஊருள் பழுத்த கனிமரம் போல் அவருடைய அறிவு பலருக்கும் பயன் தருவதாயிற்று. அவருடைய புகழ் கதிரவன் ஒளிபோல் எங்கும் பரவியது.

அவருடைய வாழ்க்கைத் துணைவியார் மங்களாம்பிகை உத்தமமான குணங்களை உடையவள். பொறுமையின் கருவூலம்; அன்பின் சிகரம்; கற்பின் களஞ்சியம்; கணவனுர் கருத்தறிந்து இல்லறமாகிய நல்லறத்தில் இனிது ஒழுகிவந்தார். வந்த விருந்தினர் மனம் மகிழுமாறு உணவளித்து கனியமுதமன்ன இனிய மொழிகளைக் கூறி உபசரிப்பதில் வல்லவள்.

ஒருநாள் சிவராஜர் மனைவியாரை நோக்கி, "பெண்ணே! உன் முகம் வாடி இருப்பதற்குக் காரணம் யாது? உனக்கு என்ன வேண்டும்" என்று வினவினுர்.

மங்களாம்பிகை:— சுவாமி! அழகிய ஒருமரம், எத்துணை நீளமாக வளர்ந்தும், கிளைகள் கிளைத்தும், பூக்கள் பூத்தும் பழம் பழுக்க வில்லையானுல் அம் மரத்தால் யாதுபயன்? அது போல், நம் வாழ்வில் எல்லா நலன்களும் அமைந்திருந்தும், குழந்தைநலம் அமையவில்லையே; மகப்பேறு இல்லாத வாழ்வு, மயான பூமிபோல் மாண்பு இழந்ததாகும். பொன்னும் பொருளும் மாடும் வீடும் நிரம்பி இருந்தும் மனத்தில் மகிழ்ச்சி இல்லை. என் செவியில் எத்தனையோ இன்னிசை விழுந்தும் அம்மா என்று அழைக்கின்ற மழலைமொழி விழவில்லை.



"கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்
சொல்லா லுருக்கி அழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடும் மகிழ்ச்சி மைந்தர்
இல்லாதவர்க்கு மனைவாழ்வின் மாண்பு என்னும்"

என்றபடி நம்முடைய வாழ்வு, மணமில்லாத மலர் போலும், குணமில்லாத மனிதன்போலும், அன்பில்லாத பூஜை போலும், கற்பில்லாத பெண்போலும், ஆன்ருேரில்லாத அவை போலும் இனிமையில்லாத பாடல் போலும், குழந்தையில்லாத வாழ்வு சிறப்படைவதில்லை. அதனுல் என் மனம் மகிழ்ச்சியின்றி வருந்துகின்றது" என்று கூறினுள்.

சிவராஜர்:— 'பெண்மணியே! 'பேதைமை என்பது மாதர்க் கணிகலம்' என்ற வாக்கு உன் விஷயத்தில் பொய்யாகவில்லை. குழந்தையினுல் சுகம் என்று கருதி வருந்துகின்றனையே; முற்பிறப்பிலே வாங்கிய கடனைத் திரும்பக் கொடுக்கவில்லையானுல் கடன் தந்தவர்களே குழந்தைகளாக வருகின்ருர்கள்.

"ருணுனுபந்த ரூபேண பசு பத்நி சுதாலய" என்பது ஆன்ருேர் வாக்கு.

மாதவத்தால் மார்க்கண்டேயரைப் போலவும் துருவரைப் போலவும், நன்மக்கள் பிறந்தால் அம் மக்களால் நன்மை உண்டாகும். பெரும்பாலும் மக்களால் துன்பமே விளையக் காண்கின்ருேம்.

"மதலையைப் பெறுநாள் துன்பம் வளர்த்திடும் நாளும் துன்பம்
விதலைநோய் அடையில் துன்பம் வியன் பருவத்தும் துன்பம்
கதமுறு காலர் வந்து கைப்பற்றில் கணக்கில் துன்பம்
இதமுறு பாலர் தம்மால் எந்நாளும் துன்பமாமே"

கானல் நீரைத் தண்ணீரென்று கருதி ஓடிய மான்போலே துன்பத்தை இன்பமென்று கருதுகின்றனை. உண்மையான இன்பத் தேன் இறைவன் திருவடியில் ஊறுகின்றது. அவன் திருவடியைத் தியானித்தால் அன்றி அமைதியும் ஆனந்தமும் உண்டாக மாட்டா. "எழுகடல் மணலை அளவிடின் அதிகம் எனதிடர் பிறவி அவதாரம்" என்கின்ருர் அருணகிரிநாதர். ஆகவே எண்ணில்லாத பிறவிகளேடுத்த நாம் பிறவிகள் தோறும் வந்த மக்களால் என்ன பயனடைந்தோம்? பைத்தியமே! பந்தபாசங்களை விடுவதுவே வீடுபேருகும். வீடுபேற்றை விரும்பி சாந்தியுடன் வாழ வேண்டும். சாந்திக்கு வழி இறைவன் திருவடித்தியானமாகும். உடைந்த பானையை எடுத்து எறிவதுபோல், மைந்தரில்லையே என்ற கவலையை உதறித் தள்ளிவிட்டு அமைதியுடன் இருப்பாயாக" என்ருர்.

மங்களாம்பிகை:- "சுவாமி! கற்புடைய மகளிருக்கு கணவன் வாக்கே வேதவாக்காகும். "அபுத்ரஸ்ய கதிர் நாஸ்தி"

உ
முருகா

# கற்பு

" மாதரசி "

திருத்தணி என்பது முருகனுக்குகந்த திருத்தலம். ஐந்தாவது படைவீடாகிய குன்றுதோருடலில் தலைசிறந்த தலம். "புவிக்குயிராகிய தணிமலை" என்பார் அருணகிரிநாதர். அடியார்களது வினைகளைத் தணிக்க வல்ல தலம் ஆதலின் தணிகை என்று பேர் பெற்றது. மிகுந்த மகிமை வாய்ந்த திவ்யத்தலம்.

இத்திருத்தலத்தில் அந்தணர் மரபில் வந்தவர் "**சிவராஜ குருக்கள்**". அவர் சிறந்த முருகபக்தர். நல்லறங்கள் பல புரிவார். இன்னுரையே பகர்வார். கருணை நிறைந்த மனம் படைத்தவர். ஒழுக்கத்தை உயிரினும் மேம்பட்டதாக எண்ணும் உத்தம சீலர். வேதாகமங்களில் வல்லவர். கூர்த்த மதிநலம் படைத்தவர். சிறப்பாக ஜோதிட நூலில் மிக்க தேர்ச்சி பெற்றவர். பலருக்குப் பொருள் விரும்பாமல் ஜாதகங்களைப் பார்த்தும் பலாபலன்களைச் சொல்லியும் ஆருடங்கள் சொல்லியும் உபகரிப்பர். மலரை நாடி வண்டுகள் செல்வதுபோல் பலர் அவரை விரும்பி வந்து பல சந்தேகங்களைக் கேட்டுத் தெளிவு பெறுவார்கள். நடு ஊருள் பழுத்த கனிமரம் போல் அவருடைய அறிவு பலருக்கும் பயன் தருவதாயிற்று. அவருடைய புகழ் கதிரவன் ஒளிபோல் எங்கும் பரவியது.

அவருடைய வாழ்க்கைத் துணைவியார் மங்களாம்பிகை உத்தமமான குணங்களை உடையவள். பொறுமையின் கருவூலம்; அன்பின் சிகரம்; கற்பின் களஞ்சியம்; கணவனுர் கருத்தறிந்து இல்லறமாகிய நல்லறத்தில் இனிது ஒழுகிவந்தார். வந்த விருந்தினர் மனம் மகிழுமாறு உணவளித்து கனியமுதமன்ன இனிய மொழிகளைக் கூறி உபசரிப்பதில் வல்லவள்.

ஒருநாள் சிவராஜர் மனைவியாரை நோக்கி, "பெண்ணே! உன் முகம் வாடி இருப்பதற்குக் காரணம் யாது? உனக்கு என்ன வேண்டும்" என்று வினவினுர்.

மங்களாம்பிகை:— சுவாமி! அழகிய ஒருமரம், எத்துணை நீளமாக வளர்ந்தும், கிளைகள் கிளைத்தும், பூக்கள் பூத்தும் பழம் பழுக்க வில்லையானுல் அம் மரத்தால் யாதுபயன்? அது போல், நம் வாழ்வில் எல்லா நலன்களும் அமைந்திருந்தும், குழந்தைநலம் அமையவில்லையே; மகப்பேறு இல்லாத வாழ்வு, மயான பூமிபோல் மாண்பு இழந்ததாகும். பொன்னும் பொருளும் மாடும் வீடும் நிரம்பி இருந்தும் மனத்தில் மகிழ்ச்சி இல்லை. என் செவியில் எத்தனையோ இன்னிசை விழுந்தும் அம்மா என்று அழைக்கின்ற மழலைமொழி விழவில்லை.



"கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்
சொல்லா லுருக்கி அழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடும் மகிழ்ச்சி மைந்தர்
இல்லாதவர்க்கு மணவாழ்வின் மாண்பு என்னும்"

என்றபடி நம்முடைய வாழ்வு, மணமில்லாத மலர் போலும்,
குணமில்லாத மனிதன்போலும், அன்பில்லாத பூஜை
போலும், கற்பில்லாத பெண்போலும், ஆன்ருேரில்லாத அவை
போலும் இனிமையில்லாத பாடல் போலும், குழந்தையில்லாத
வாழ்வு சிறப்படைவதில்லை. அதனுல் என் மனம் மகிழ்ச்சியின்றி
வருந்துகின்றது" என்று கூறினுள்.

சிவராஜர்:— 'பெண்மணியே! 'பேதைமை என்பது மாதர்க்
கணிகலம்' என்ற வாக்கு உன் விஷயத்தில் பொய்யாகவில்லை.
குழந்தையினுல் சுகம் என்று கருதி வருந்துகின்றனையே; முற்
பிறப்பிலே வாங்கிய கடனைத் திரும்பக் கொடுக்கவில்லையானுல்
கடன் தந்தவர்களே குழந்தைகளாக வருகின்ருர்கள்.

"ருணனுபந்த ரூபேண பசு பத்நி சுதாலய" என்பது
ஆன்ருேர் வாக்கு.

மாதவத்தால் மார்க்கண்டேயரைப் போலவும் துருவரைப்
போலவும், நன்மக்கள் பிறந்தால் அம் மக்களால் நன்மை உண்
டாகும். பெரும்பாலும் மக்களால் துன்பமே விளையக் காண்
கின்ருேம்.

"மதலையைப் பெறுநாள் துன்பம் வளர்த்திடும் நாளும் துன்பம்
விதலைநோய் அடையில் துன்பம் வியன் பருவத்தும் துன்பம்
கதமுறு காலர் வந்து கைப்பற்றில் கணக்கில் துன்பம்
இதமுறு பாலர் தம்மால் எந்நாளும் துன்பமாமே"

கானல் நீரைத் தண்ணீரென்று கருதி ஓடிய மான்போலே துன்
பத்தை இன்பமென்று கருதுகின்றனை. உண்மையான இன்பத்
தேன் இறைவன் திருவடியில் ஊறுகின்றது. அவன் திருவடி
யைத் தியானித்தால் அன்றி அமைதியும் ஆனந்தமும் உண்டாக
மாட்டா. "எழுகடல் மணலை அளவிடின் அதிகம் எனதிடர் பிறவி
அவதாரம்" என்கின்ருர் அருணகிரிநாதர். ஆகவே எண்ணில்
லாத பிறவிகளேடுத்த நாம் பிறவிகள் தோறும் வந்த மக்களால்
என்ன பயனடைந்தோம்? பைத்தியமே! பந்தபாசங்களை விடு
வதுவே வீடுபேருகும். வீடுபேற்றை விரும்பி சாந்தியுடன் வாழ
வேண்டும். சாந்திக்கு வழி இறைவன் திருவடித்தியானமாகும்.
உடைந்த பானையை எடுத்து எறிவதுபோல், மைந்தரில்லையே
என்ற கவலையை உதறித் தள்ளிவிட்டு அமைதியுடன் இருப்பா
யாக" என்ருர்.

மங்களாம்பிகை:- "சுவாமி! கற்புடைய மகளிருக்கு
கணவன் வாக்கே வேதவாக்காகும். "அபுத்ரஸ்ய கதிர் நாஸ்தி"

என்று வேதம் கூறுகின்றது. குழந்தையில்லாதவர்களுக்கு மோக்ஷம் இல்லை என்பதுதானே அதன் பொருள்; வேதவசனம் பொய்யாகாதல்லவா? அந்த வேதவசனப்படி மகப்பேறு இல்லாத நமக்கு நற்கதி கிடைக்காதே'' இம்மையிலும் குழந்தையுடன் கூடி மகிழும் இன்பம் இல்லை; மறுமையிலும் பரகதியில்லை. எனவே குழந்தையில்லாத நமக்கு இருமையும் இல்லை. பெருமையுமில்லை. அதனால்தான் என் உள்ளத்தில் நிம்மதியில்லை'' என்றாள்.

சிவராஜர்:- பெண்மணியே! நான் உன் வசனத்திற்குத் தக்க விடை கூறுவேன். கவனமாகக் கேள். "குழந்தையில்லாதவர்கட்கு முத்தியில்லை'' என்று வேதம் விளம்புகின்றது. ஆனால் அதற்கு குழந்தையில்லாதவர்க்கெல்லாம் முத்தியில்லையென்று நேரே பொருள் செய்யக்கூடாது. குழந்தை பெற்றார்க்கெல்லாம் சுவர்க்கம்; பெறாதார்க்கெல்லாம் நரகம் என்பது பொருந்தாது. திருவள்ளுவர் குழந்தை பெறவில்லை; திருநீலகண்டர் குழந்தை பெறவில்லை; இளையான்குடிமாற நாயனாருக்கு மகப்பேறில்லை. இன்னும் திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசு நாயனார் முதலிய சமய குரவர்கட்கும் குழந்தையில்லை. ஆகவே அவர்கட்கெல்லாம் முத்தியில்லை. தெருவில் அலைகின்ற நாய்க்கும் நரிக்கும் பன்றிக்கும் நிரம்பவும் குழந்தைகள் உண்டு. அதனால் அவைகளுக்கெல்லாம் முத்தியுண்டு என்று எண்ணலாமா?

இனி அதன் உட்கருத்துயாதுஎனில், கருணையில்லாதவர்க்கு முத்தியில்லை; குழந்தை பெற்றார்க்குக் கருணை வளர வழியுண்டு. திருவள்ளுவர் முதலிய ஆன்றோர்கள் எல்லாவுயிர்களையும் தமது குழந்தைகளாக எண்ணி இரங்கினார்கள். ஆகவே எல்லாவுயிர்களும் அவர்களது குழந்தைகள்தான். ''மைந்தர்பல்லுயிரும்'' என்கின்றார் மாணிக்கவாசகர். ஆகவே கருணையை வளர்த்து பரந்த நோக்கமுடையவர்களாய் வாழ்ந்து எல்லாவுயிர்களையும் நமது குழந்தைகளாகக் கருதிவந்தால் நமக்கு நிச்சயமாக முத்தியுண்டு. குழந்தையில்லாத மலடியாகிய வந்தியம்மைக்குச் சிவபெருமான் முத்தி தந்தார் என்ற அரிய வரலாற்றையும் உன்னிப்பாய்'' என்று இனிய அரிய உண்மைகளை மனைவிக்கு உபதேசித்தனர்.

கணவனாருடைய உபதேச மொழிகளைக் கேட்ட மங்களாம்பிகை சிறிது மனந் தேறினாள். எனினும் அடித்தட்டில் மக்கள் இல்லையே என்ற வருத்தம் மட்டும் நிழலாடிக் கொண்டிருந்தது. இறைவனை நெஞ்சார நினைத்து வேண்டுவாள். சோமவார விரதம், ஷஷ்டி விரதம், கார்த்திகை விரதம் முதலிய விரதங்களை மேற்கொண்டு பக்தி சிரத்தையுடன் அநுஷ்டித்து வந்தாள்.

''வேண்டுவார் வேண்டுவதே ஈவான்கண்டாய்''

''கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான்தன்னை''



என்ற திருவாக்கின்படி அம்மையார் முறைக்கு அறுமுகப் பெருமான் செவிசாய்த்து அருள்புரிந்தனன்; மங்களாம்பிகை மணிவயிறு வாய்த்தது. கருவும் திருவும் வளர்ந்தன. கோள்கள் நன்னிலையில் நிற்கும் வேளையில் ஆண்மகவைப் பெற்றனள். சுற்றமும் நண்பரும் சூழ்ந்து மகிழ்ந்து கொண்டாடினார்கள்.

தங்கச்சிலை போன்ற தனயனுக்கு **சதானந்தம்** என்று பேர் சூட்டினார்கள். குழந்தை அருமையினும் அருமையாக வளர்ந்தது. உற்றாரும் பெற்றாரும் மைந்தனுடைய எழில் நலத்தைக் கண்டு பெரிதும் இன்புற்றார்கள். உரிய காலத்தில் பள்ளிக்கு அனுப்பினார்கள்.

**ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவர்க்கு**
**எழுமையும் ஏமாப்புடைத்து.**

என்ற திருவள்ளுவரது திருவாக்கின் படி, முற்பிறப்பின் வாசனையால் சதானந்தம் மிகுந்த கூர்த்த மதிநலம் உடையவனாய் கல்வி பயின்றுவந்தான். வட மொழியிலும் தென் மொழியிலும் வல்லவன் ஆனான். அவனுடைய அறிவாற்றலைக் கண்டு அனைவரும் அதிசயித்தார்கள். சதானந்தம் வளர்பிறைமதிபோல் வளர்ந்தனன்.

ஒருநாள் சிவராஜ குருக்கள் வெளியே சென்றிருந்தார். திருத்தணிகையை யடுத்துள்ள கார்வேட் நகரை யாளுகின்ற மன்னர்பிரான் தனது தேரில் வந்தனர். சிவராஜ குருக்களது வீட்டில் நுழைந்து, சதானந்தனைப் பார்த்து, ''ஐயா! தந்தையார் எங்கே?'' என்று வினவினார்.

சதானந்தன் ''மன்னர்பெருமானே! வணக்கம். என் தந்தை அயலூர் சென்றிருக்கின்றார். இப்போது தாங்கள் பகைவரால் சூழப்பட்டிருக்கின்றீர். உமது ஜாதகத்தின்படி சத்ருஸ்தானமாகிய ஆறுமிடத்தில் பாவக்கிரகங்கள் சேர்ந்திருப்பதனால் இப்போது நீங்கள் பகைவருடன் போரிட்டால் வெற்றி வராது. வீணே ஏழை மக்களாகிய போர் வீரர்கள் மாண்டு ஒழிவார்கள். காலத்தை அநுசரித்துச் செய்வதே கடமை. பகலில் காகம் கூகையை வெல்லும்; இரவில் கூகை காகத்தை வெல்லும்; தண்ணீரில் யானையை முதலை வெல்லும்; நிலத்தில் முதலையை யானை வெல்லும். ஆதலால் காலமறிந்து இடமறிந்து கருமங்களைச் செய்யவேண்டும். அதனால்தான் திருவள்ளுவர் ''காலமறிதல்'' ''இடமறிதல்'' என்ற இரு அதிகாரங்களைத் தனித் தனியே அமைத்துள்ளார்.

**ஞாலங் கருதினுங் கைகூடும் காலம்**
**கருதி இடத்தாற் செயின்.** —**திருக்குறள்**

ஆகவே அரசரே! இப்போது காலஞ் சுகமாக இல்லை. காலபலமில்லாத போது போர் தொடங்கக்கூடாது. **ஆதலினால்**

தாங்கள் பகைவருடன் சமாதானஞ் செய்துகொள்ளவும்" என்று இனிதாக ஆலோசனை கூறினான்.

மன்னர்பிரான், "ஐயனே! வணக்கம். தாங்கள் கூறிய படியே செய்வேன். ஒரு சந்தேகம்; நான் பொதுவாக அப்பா எங்கே என்றுதானே கேட்டேன். தாங்கள் நான் என்ன கருமத்துக்காக வந்தேன் என்பதையும், என்ன கேட்கவந்தேன் என்பதையும் அறிந்து என் சந்தேகத்தைத் தீர்த்து அருளினீர். எவ்வாறு அறிந்தீர்?" என்று கேட்டார்.

சதானந்தன், "அரசரே! தாங்கள் வந்த நேரத்தை யளந்தும் உமது கேள்வியைக் குறித்தும் கணிதம் புரிந்து அறிந்து கூறினேன்; எல்லாம் பெரியவர்களது ஆசீர்வாத பலன் தான்" என்றான். மன்னர் மனமகிழ்ந்து தனது கழுத்திலிருந்த நவரத்ன மாலையைக் கழற்றி நினைவுச் சின்னமாக அவன் கழுத்தில் அணிந்துவிட்டுத் தேரேறிச்சென்றார்.

பின்னர் சிவராஜர் வந்தார். தமது இல்லத்திற்கு முன் தேர் வந்த அடிச் சுவட்டைக் கண்டனர். "மகனே! இங்கு இதோ தேர் வந்த சுவடு காணப் படுகின்றதே? யார் வந்தது?" என்று கேட்டார்.

"அப்பா! கார்வேட் நகர வேந்தர் வந்தார். 'அப்பா எங்கே?' என்று கேட்டனர். அடியேன் அவரை அலைவிக்க வேண்டாம் எனக் கருதியும், அவருக்கு உபசரிப்பது அவசியம் என்று எண்ணியும் அவர் வந்து கேட்ட நேரத்தைக் கணிதம் புரிந்து 'பகை மன்னர் வந்து சூழ்ந்திருப்பதையும், பகைவருடைய வீடாகிய ஆறுமிடம் பழுதுபட்டிருப்பதையும் அறிந்து சண்டை செய்யவேண்டாம்; சமாதானம் செய்துகொள்ளுங்கள்' என்று சொல்லியனுப்பினேன்" என்றான்.

இந்த சொற்களைக் கேட்ட சிவராஜர் விம்மி விம்மியழத் தொடங்கினார். ஒருவேளை தான் சொல்லியது பிழையோ? அது கருதி தந்தை யழுகின்றார் போலும்" என்று கருதி மைந்தனும் கண்ணீர் சிந்தினான். தந்தையும் மைந்தனும் கண் கலங்குவதைக் கண்ட மங்களாம்பிகை யாருக்கு என்ன இடரோ? என்று எண்ணி அவளும் அழுதாள். அங்கு வந்த உறவினரும் அழுகைக்குக் காரணம் அறியாது உடன் சேர்ந்து அழுதார்கள். ஆனால் ஒருவருக்கும் அழுகையின் உட்பொருள் தெரியாது. முடிவில் எல்லோரும் ஓய்ந்தார்கள். சிவராஜர் மட்டும் அழுத வண்ணமாகவே இருந்தார்.

மங்களாம்பிகை மணவாளனை நோக்கி, "சுவாமி! ஏன் இப்படி விம்மி விம்மி யழுகின்றீர்? யாருக்கு என்ன ஆபத்து? விவரமாகக் கூறுங்கள்" என்று கேட்டாள்.



"பெண்ணே! வந்த மன்னர் அப்பா எங்கே என்று கேட்டால் இல்லை என்று விடை கூறினால் போதும். வேந்தன் வந்த வேளையைக் கணிதம் புரிந்து பகைவர் வந்து வளைந்திருப்பதையும் சத்ருஸ்தானம் பழுது பட்டிருப்பதையும் அறிந்து அரசனுக்குச் சமாதான முறையைப் போதித்து அனுப்பிய நமது அருமந்த மகனுக்கு ஆண்டவன் பூரண ஆயுளைத் தரக் கூடாதா? இந்த உத்தமமான பிள்ளைக்கு ஆயுள் பதினாறு தான். இவன் ஜாதகத்தைக் கணித்துப் பார்த்ததில் ஆயுள் பல மில்லை. இதனை இதுவரை நான் வெளிப்படுத்தவில்லை. இன்று எனக்கு அதனை நினைத்தவுடன் துக்கம் தாங்கமுடியவில்லை" என்று கூறி மீளவும் விம்மி யழுதார்.

இதனைக் கேட்ட சதானந்தன் தனக்குள் எண்ணுவான். "தந்தையார் ஜோதிடத்தில் சாலவும் வல்லுநர். நமது ஜாதகத்தில் ஆயுள் பாவம் நன்கு இல்லை போலும்? ஆனால் தந்தையார் மனக்கவலையை மாற்ற வேண்டும்" என்று கருதினான். "அப்பா! எனது ஜாதகக் குறிப்பைக் காட்டுங்கள்" என்று கேட்டான். தந்தை மைந்தனிடம் அவனுடைய ஜாதகக் குறிப்பை நீட்டினார்.

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | சூரி புதன் | சுக் | கேது |
| அங் | இராசி | | லக் / குரு |
| | | | |
| சனி ராகு | | | |

இந்தக் குறிப்பை சதானந்தன் சிறிதுநேரம் உற்று நோக்கினான். "அப்பா! தாங்கள் பெரிய அறிவின் கருவூலம். தங்களுக்குத் தெரியாதது யாதொன்று மில்லை. எனினும் யான் இதனைச் சற்று நுட்பமாக ஆராய்கின்றேன். தாங்கள் இந்த ஜாதகருக்கு ஆயுள் இல்லை என்பதற்கு எந்த ஆதாரம் கொண்டு அறிகின்றீர்?" என்று வினவினான்.

மகனே! சற்று உற்றுப்பார்.

ஷஷ்டாஷ்டமே பாபயுதே
ஸௌம்ய த்ருஷ்டி விவர்ஜிதே!
ஆபோக்லிமே விலக்நே
ஷோடஸே நிதனம் வ்ரஜேத்!!

மேலும் களத்திரகாரகன் சுக்கிரபகவான்; லாபஸ்தானத்தில் ஆட்சிபெற்றிருப்பதனுல் மனைவியினுல் சுகமும் அரசசெல்வமும் உடையவனுக ஆவேன்.

மோக்ஷ காரகனுகிய கேது விரயஸ்தானமாகிய 12ம் இடத்தில் இருப்பதனுல் இப் பிறப்பிலேயே முத்தியடையக் கூடிய பெரு வாய்ப்பும் இச் சாதகனுக்குண்டு.

ஆகவே என் அருமைப்பிதாவே! என்னுடைய எதிர் காலம் மிகவும் சிறப்புடையதாக இருக்கும். அதுபற்றித் தாங்கள் கவலையுற வேண்டாம். நமது குலதேய்வமாகிய குமாரக்கடவுள் இருக்கும்போது நமக்கு ஒரு குறையும் வராது" என்று கூறித் தேற்றினுன்.

மகனுடைய சொற்களைக் கேட்டு தந்தை மனக்கவலையை மாற்றிக்கொண்டார். தன்னைப் பார்க்கினும் தனது மகன் ஜோதிடக் கலையிலும் மற்றைய கலைகளிலும் அளவற்ற அறிவாற்றல் பெற்றிருப்பதைக் கண்டு கழிபேருவகை யெய்தினுர்.

'தம்மில் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது'

என்ற பொய்யாமொழி அவருக்கு அநுபவப்பயனுயிற்று.

சதானந்தனுக்கு வயது பதினைந்து முடிவுபெற்றது. பதினுருவது ஆண்டு தொடங்கியது. கட்டழகும் கல்வி யழகும் ஒருங்கே பெற்ற அத்திருவாளன் தனக்குள் சிந்திப்பான்.

நமது ஜாதகப்படி பதினுருவது ஆண்டில் ஆயுள் முடியும். அதில் ஐயமேயில்லை. தந்தை தாய்க்கு அருகில் நமக்கு மரணம் வருமாயின் தாய் தந்தையர் தாங்க முடியாத துக்கத்தை யடைந்து அவர்களும் மாள்வார்கள். நம்மைத் தவம்புரிந்து பெற்ற தாய் தந்தையர் வருந்துவது கூடாது. அவர்கள் வருந்தமல் இருக்க என்ன வழி. விதியையும் நம்மால் மாற்ற முடியாது

முதிர் தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லும் நீர்மையார்.

என்று கந்தபுராணங் கூறுகின்றது. ஆகவே விதியை யார் வெல்லமுடியும்? மற்ருென்று சூழினும் தான் முந்துறுவது ஊழ் அதனிலும் பெருவலியுள்ளது யாதும் இல்லை.

பரமதருமகுணசீலராகிய இராமரையே விதி யாட்கொண்ட தென்றுல் நான் எம்மாத்திரம்? பதிவிரதா சிரோன்மணியாகிய சீதாதேவி மானை விரும்பினுள். விரும்பியதோடல்லாமல் "பிடித்துக் கோடு" என்று கணவனுரை வற்புறுத்திக் கேட்ட



வனைச் சகல தேவர்களும் வணங்குவார்கள்; எனக்கு நெடுங் காலமாக ஒரு அவா. வடக்கே காசி முதலிய திருத்தலங்களைச் சேவிக்கவேண்டும்; கங்கையில் முழுக வேண்டும் என்பது; பல்லாயிரமாண்டுகள் தவம்புரிந்து பகீரதன் கங்கையைக் கொணர்ந்தான். பாரத தேயத்தில் இமயமலையும் கங்கையாறும் ஒப்பற்ற உயர்ந்த செல்வங்களாக விளங்குகின்றன. ஆகவே அடியேன் கங்கையில் முழுகி காசி விஸ்வநாதரை வணங்கிவருவேன். கருணை கூர்ந்து விடை கொடுங்கள்'' என்று வேண்டினான்.

சிவராசரும் மங்களாம்பிகையும் மகனுடைய சொற்களைக் கேட்டுத் திடுக்கிட்டார்கள். ''மகனே இந்த இளம்பருவத்தில் உனக்கு யாத்திரை வேண்டாம். வயது முதிர்ந்த நாங்களே இன்னும் காசிபோகவில்லை. கண்ணே! உன்னைப் பிரிந்து நாங்கள் எவ்வாறு இருப்போம்? திருமணம் ஆனபிறகு செல்வது உத்தமம். ஆகவே இப்போது வேண்டாம்'' என்றார்கள்.

சதானந்தம் ''அம்மா! அப்பா! தங்கள் சொல்லே எனக்கு வேதவாக்கு. திருமணம் ஆனபிறகு பந்தபாசம் அதிகமாகும். திருமணத்திற்கு முன் போவதுவே உத்தமம். சென்று விரைவில் திரும்புவேன். சிறியேனுடைய இந்த விருப்பத்தை நிறைவேற்றிக் கொடுப்பது தங்கள் கடமை. எனக்கு வேறு ஒன்றிலும் விருப்பமில்லை. தங்கள் ஆசீர்வாதம் இருக்கும்போது எனக்கு ஒரு குறைவும் நேராது. திருத்தணி முருகன் வழித்துணை வருவான். நாளை நாள் நன்றாக இருக்கின்றது. ஆசிகூறி அனுப்புங்கள்'' என்று மன்றாட்டமாக வேண்டினான்.

மைந்தனுடைய வேண்டுதலுக்கு இணங்கினார்கள். மறுநாள் காலை சதானந்தன் மலைமீதுள்ள தணிகேசனையும், தாய் தந்தையரையும் வலஞ் செய்து வணங்கினான். தாய் கட்டமுது கொடுத்து என் அருமை மகனே! மாதவத்தால் உதித்த மாணிக்கமே! கட்டிக் கொடுத்த கட்டுச்சோறும் சொல்லிக் கொடுத்த புத்தியும் நெடுநாட்களுக்கு உதவமாட்டா; ஆதலால் உனது நல்லறிவைக் கொண்டு செந்நெறி நின்று கங்கையில் முழுகிக் காசிநாதரை வணங்கி விரைந்து மங்களமாக வரக் கடவாய். ஆறுமுகப் பெருமானுடைய அருளாகிய கவசம் உனக்கு எப்போதும் அரண் புரிவதாக; பசி தாகத்தாலும், பகைவர்களாலும், புலி, கரடி, பாம்பு, தேள் முதலிய கொடிய உயிர்களாலும், உனக்குத் தீங்கு நேராவண்ணம் கந்த வேளை எந்த வேளையும் போற்றுவேன். போய்வா'' என்று கண் கலங்கி ஆசிமொழிகூறி விடை தந்தாள். தந்தையும் உள்ளங் குழைந்து வாழ்த்தியனுப்பினார்.

இவ்வாறு மாதா பிதாக்களிடம் பிரியாவிடை பெற்றுக் கொண்டு சதானந்தன் காசியாத்திரைக்குப் புறப்பட்டான்.

(தொடரும்)

உ
முருகா

# கூவத்து நாரணன்

நமது நாட்டில் பல புலவர்கள் பலஞானிகள் பல வீரர்கள் பல பதிவிரதைகள் பல பக்தர்கள் வாழ்ந்தார்கள். ஆனால் வள்ளல்கள் சிலரே வாழ்ந்தார்கள். ஞானிகளை யும் பக்தர்களையும் வீரர்களையும் புலவர்களையும் உத்தமிகளை யும் எண்ணிக்கையில் அடக்கிக் கூறுவதில்லை. ஏன்? அவர்கள் எண்ணில் அடங்கமாட்டார்கள். அநேகர்கள் இருந்தார்கள்.

வள்ளல்களை எண்ணிக்கையில் அடக்கி முதலேழு வள்ளல், இடையேழு வள்ளல், கடையேழு வள்ளல் என்று கூறுவர். அவர்கட்குப் பின்னர் ஒரு சில வள்ளல்கள் இந்த நாட்டை அலங்கரித்தார்கள். ஆ! ஆ! அவர்களுடைய கொடைத்திறனை எண்ணும்போது மயிர்க் கூச்சல் உண்டாகின்றது.

ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன்றும் புலவர்
வார்த்தைபதி னாயிரத்தில் வாய்க்குமே—பூத்தகுழல்
தண்டா மரைத்திருவே தாதாகோடிக்கொருவர்
உண்டாயின் உண்டென்றறு.

என்று ஔவையார் கூறுகின்றனர். இதனால் வள்ளல்கள் கோடிக்கோருவர் என அறிகின்றோம். அந்த வள்ளல்கள் மாய்ந்தும் மாயாதவராக இன்றும் புகழுடம்பு பெற்றுத் திகழ் கின்றார்கள். ஈயாத லோபிகள் இருந்தும் இறந்தவர்களே யாவார்கள்.

மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள் மாயா
தேந்திய கைகொ டிரந்தவர் எந்தாய்
வீய்ந்தவர் என்பவர் வீய்ந்தவ ரேனும்
ஈய்ந்தவ ரல்லதி ருந்தவர் யாரே.

என்கின்றார் கம்பநாடர்.

அள்ளி வழங்கிய வள்ளல்களின் வரிசையில் பிற்காலத்தில் வாழ்ந்தவர் **கூவத்து நாரணன்** என்பவர்.

சென்னைக்கு மேற்கே உள்ள கூவம் என்பது பாடல்பெற்ற திருத்தலம். திரிபுரமெரித்த சிவபெருமான் இங்கு வீற்றிருக் கின்றார். அரிய பெரிய அற்புதப் புண்ணியப் பதி. இத்தலத்தில் வாழ்ந்தவர் **நாரணர்**; வரையாது வழங்கும் வள்ளல். வறியவர்கள் வந்தால் இன்முகங் காட்டி இன்னுரை கூறி அள்ளி அள்ளி ஈந்து அவர்களது வறுமைப் பேயை ஓட்டி மகிழ்வித்து அனுப்பு வார். அதனால் அவர் புகழ் எங்கும் பரவியது. அக்காலத்தில் அவரைப் பாராட்டாத பாவலரேயில்லை. மதிக்காதமனிதனுமில்லை.

ஊர் நடுவே பழுத்த இனிய கனிமரம் போல் நின்று எல்லோருக்கும் உதவி வந்தனர். செல்வத்தின் பயனுகிய தான தருமங்களைப் புரிந்து தயா சாகரமாக விளங்கினர்.



ஒரு அடியவர் அந்த ஊரில் ஆண்டுதோறும் குருபூஜையை மிக்க அன்புடனும் ஊக்கத்துடன் புரிந்து வந்தார். அந்தக் குரு பூஜையில் ஆயிரக்கணக்கான வறியவர்கட்கு அன்ன தானம் புரிவார். அரிசி பருப்பு முதலியவைகளைப் பலரிடம் கேட்டுப் பெறுவார்.

நாரணரிடம் வந்து விறகு வேண்டும் என்றார். அவரும் தருவதாக வாக்களித்தார். அடியவர், "அண்ணலே! குருபூஜை யன்று வந்து விறகை வாங்கிக்கோள்வேன். இன்றே பெற்றுக் கோண்டு போனால் விறகை வைக்க இடம் இல்லை. ஆகவே தேவையன்று வாங்கிக்கோள்வேன்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

திருவருட் செயலால் 15 நாட்களாக விடாது அடை மழை பெய்யத் தோடங்கியது. எங்கும் ஒரே வெள்ளம்; அதனால் தோட் டத்திலும் கடைகளிலும் உள்ள விறகுகள் யாவும் நன்கு நனைந்து ஈரமாகி விட்டன.

அடியார் குருபூஜை செய்யும் தினத்தன்று வந்து வள்ளல் நாரணனை வணங்கி "ஐயனே! இன்று தான் குருபூஜை. ஆயிரக் கணக்கில் அடியார்கட்கு அன்னம் இட ஏற்பாடு செய்திருக் கின்றேன். அரிசி, பருப்பு, காய்கறிகள் எல்லாம் ஆயத்தமாகி யிருக்கின்றன. அன்று விறகு தருவதாக வாக்களித்தீர்களே; அதனை இத்தருணத்தில் தந்து உதவிபுரியும்" என்று வேண்டினர்.

நாரணர், "நல்லது தருகின்றேன்" என்றார். விறகு அத்தனையும் நனைந்திருப்பதனைக் கண்டார். நனைந்த விறகைத் தந்து என்ன பயன்? அடுப்பு எரியாதல்லவா? பல்லாயிரம் பேர் உண்ணுகின்ற அன்னதானம் ஒழுங்காக நடைபெறு தல்லவா? ஆக உதவாத போருளை உதவுவது முறையன்று" என்று எண்ணினர்: வீட்டில் உள்ள ஏவலர்களை அழைத்தார். வீட்டிலே ஒரு பகுதியை பிரிக்கச் செய்தார்: ஓடுகளை இறக்கு வித்தார்; உத்தரம்; கழிகள்; தூண்கள் முதலிய மரங்களை வண்டியில் ஏற்றினர், "ஐயா! கோண்டு போங்கள். குரு பூஜையை நடத்துங்கள். ஏழைகட்கு அன்னதானத்தைத் தாராளமாகச் செய்யுங்கள்" என்றார்.

அடியார் இந்த அருஞ்செயலைக் கண்டார். அதிசயங் கோண்டார். "ஐயனே! இது என்ன செயல்? குடியிருக்கின்ற வீட்டைப் பிரிப்பது முறையா? என்னால் இந்த நிகழ்ச்சி நிகழ லாமா? புண்ணிய மூர்த்தியாகிய தங்கள் வீட்டை இடியச் செய்தா நான் குருபூஜை நடத்துவது? இது எனக்குப் பாவ மல்லவா?" என்றார்.

நாரணர், "ஐயா! வருந்தற்க. இது போல் ஆயிரம் வீடு கட்டிக் கோள்ளலாம். குருபூஜை நமது விருப்பம் போல் வராது. அதிலும் குருபூஜையில் அடியார்கட்கு அன்னமளிப்பது மிக உயர்ந்த புண்ணியம்.

உ
சிவமயம்

# திருவிளையாடல் (புராண) வசனம்

( சிவக்கிழார் : திருநாவுக்கரசு )

"பெருங்கருணைக் கடல்" சிவபரஞ்சுடர் தன்னடைந்தார்க்கு இன்பங்கள் தரவல்ல தனிமுதல். தீவினை செய்தார் செய்வினைப் பயனை எய்தி நொந்து, வருந்தி, அழுது அடி சேர்ந்தால், அவர் வினை கெடுமாறு அருளவல்ல அருளமுது. அவனியிற் புகுந்து அடியரை ஆட்கொள்ள வல்ல அண்ணல். இத்தகு கருணையரசாகிய சிவம், திருவாலவாயாம் மதுரையம்பதியில் உயிர்கள் உய்யும் வண்ணம் செய்தருளிய அருளாடல்கள் பலப்பல. அவற்றுள் அறிஞர்கள் அறிந்து பாராட்டிப் பயன் எய்துவன, அறுபத்து நான்கு ஆடல்கள். இவற்றை ஒன்பது சுவைகளும் ஒப்ப விளங்கவும், படிப்பார் உள்ளப் பாறை நெக்குருகவும் பாக்களாகச் சமைத்தருளிய பாவாணர் பரஞ்சோதி முனிவராவார். இப்பாக்களைப் பண்டிதரல்லா மற்றையர் படித்து உகத்தல் சிறிது கடினம். எனவே, இதன் சுவையெல்லாம் மிளிர வசன வடிவில், திருப்புகழமிர்த தொடர்ந்து வாசகர்களுக்கு விருந்தாய் உதவும்.

திருவிளையாடல் என்றால், தெய்வத் தன்மை பொருந்தி ஆடல் என்று பொருள். தெய்வம் அருளிய எளிவந்த வா கருணை. விளையாட்டாகவே ஐந்தொழில் இயற்றவல்லவ பெருமான். விளையாட்டு என்பது சிறிதும் சிரமமின்றி எளிதாக செயல் புரிவது என்பதாகும். எனவே, இறைவனுக்கு எக்காரி மும் எளிதே யாதலால் இறைவன் செயலெல்லாம் விளையாட என்றே பேசப்படுகின்றது. சிவனார் செயலெல்லாம் தி செயல்; சிவனார் விளையாடல் திருவிளையாடல்.

அறுபத்து நான்கு ஆடல்களில் முதலாவதாக அமைந்தி பது "இந்திரன் பழிதீர்த்த படலம்" ஆகும்; அதனைப் பரஞ்சே யார் பா மூலம் பார்ப்போமாக.

## 1. இந்திரன் பழிதீர்த்த படலம்

கிரேதாயுகத்தில் அமரர்க்கரசனாகிய இந்திரன் தேவலோ தில் தனது சபையில் ஒருநாள் தேவமாதர்கள் ஆடலை வி னான். அவ்வாறே, ரம்பை, ஊர்வசி, திலோத்தமை முத தேவ மகளிர் ஆட அவ்வாடலில் திளைத்திருந்தான். அந்த யில், அவனது குருவாகிய வியாழபகவான் இந்திரன் சபை வந்தார். தையலார் மையலில் திளைத்து மதிமயங்கிய இந்திரன் தனது குருநாதரை வணங்காது வாளா இருந் வியாழபகவானும் சபையை விட்டு அகன்று பே குருவானவர் நொந்து சபையை விட்டகலவே இந்தி திருவின் ஆக்கமாகிய வளங்கள் எல்லாம் குறைந்தன.

வஜ்ஜிராயுதத்தை ஏவினன். அது பயனில்லாது போயிற்று விருத்திரன் தனது இருப்புலக்கையால் அடிக்கவே இந்திரன் மூர்ச்சையாயினன். பின் தெளிந்து விருத்திரனை வெல்ல வழியில்லாது பிரம்மன் உலகிற்கு ஓடிப் பிரமனைத் தொழுது தன் குறையைக் கூறினன். பிரம்மா இந்திரனை அழைத்துக் கொண்டு திருமால் உலகிற்குச் சென்று அவரை வணங்கி நடந்தவை கூறி விருத்திரனைக் கொல்லும் வகை கூறுமாறு குறையிரந்தனர்.

திருமகள் கேள்வனும், இந்திரனை நோக்கிக் கூறுவான்; உனது வஜ்ஜிராயுதம் மிகப் பழையதாகிவிட்டது. எனவே அது விருத்திரனை வெல்லாது. முன்னர் தேவர்களும் அசுரர்களும் பாற்கடல் கடைந்த காலத்தில் தங்கள் ஆயுதங்களை யெல்லாம் ததீசி என்ற மகா முனிவர்பால் கொடுத்து வைத்தனர். பின்னர் இருசாராருமே அதனைக் கேட்கவில்லை. ததீசி முனிவரும், அவற்றைத் தமது தவ வலிமையால் விழுங்கினர். அவை யாவும் வஜ்ஜிரம் போன்ற அவரது முதுகெலும்புடன் ஒன்றி விட்டன. அம்முனிவர் கருணையுடையவர்; நீ சென்று அவரது முதுகெலும்பை யாசித்தால் அவர் உதவுவார். அதனை வஜ்ஜிராயுதமாகச்செய்து நீ போரிட்டால் விருத்திரனை வெல்லலாம் என்றார்.

இந்திரனும், பிரம்மாவும், திருமாலை வணங்கி மீண்டனர். பின்னர் இந்திரன் ததீசி முனிவர்பாற் சென்று வணங்கி "முனிவர் ஏறே! தேவர்கள் உய்யும் வண்ணம் விருத்திரனை வெல்லத் தங்கள் வஜ்ஜிரம் போன்ற முதுகெலும்பைத் தந்தருள்க!" என்று பிரார்த்தித்துக் குறையிரப்ப அம் முனிவர்பிரானும் மனங் கனிந்து,

"நாய் நமதென நரி நமதெனப் பிதா
தாய் நமதென நமன்றன தெனப்பிணி
பேய் நம தென மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே.

விடம் பயில் எயிற்றரவுரியம் வீநுழை
குடம்பையுந் தானெனுங் கொள்கைத்தே கொலாம்
நடம்பயில் கூத்தரி னடிக்கும் ஐவர் வாழ்
உடம் பையும் யானென உரைக் கற்பாலதோ"

என உடம்பின்நிலையாமையைநினைந்து இந்திரன் வேண்டுகோளுக்கிணங்கி யோக நிலையில் அமர்ந்து பிரமரந்திர சம்பந்தமான சுழுமுனை நாடியின் வழியாய்க் கபாலம் திறந்து வெளிப்பட்டு சிவபிரான் உலகு சேர்ந்தனர்.

பின்னர், இந்திரன் அம் முனிவர்பிரானீந்த முதுகந் தண்டைத் தெய்வக் கம்மியனால், சிறந்த குலிசப் படையாகச்

சமைக்கப்பெற்று, அதனைக் கொண்டு விருத்திரனோடு போர் செய்யப் புகுந்தனன். விருத்திரன் கடும்போர் விளைத்து வானவர் படையெல்லாம் சிதற அடித்து வதைத்தான். இந்திரனும் இது கண்டு வெகுண்டு விருத்திரனுடன் நேர் நின்று போர் விளைத்துக் குலிசப் படையாகிய வஜ்ஜிராயுதத்தை ஏவினான். அது கண்ட அவுணன் கடலில் விழுந்து மறைந்தான். இந்திரனும் கூடவே விழுந்து தேடியும் அவுணன் அகப்படவில்லை. பின்னர் இந்திரன் பிரம்மாவிடம் வந்து நடந்தது கூறினான். பிரம்மாவும் நீண்டநேரம் சிந்தித்து இந்திரனுக்கு ஒரு சூழ்ச்சி சொன்னான். நீ அகஸ்தியமாமுனிவர் பால் சென்று அவரிடம் நடந்தது கூறி இக் கடலை வற்றடித்து விருத்திரனை வெல்லத் தங்கள் உதவியைத் தந்தருள்க என்று குறையிரந்து கேள். அவர் அவ்வாறே செய்தருள்வார். பின்னர் நீ விருத்திரனை வெல்லலாம் என்று கூறினார்.

இந்திரனும் பிரம்மனை வணங்கி விடை பெற்று அகஸ்திய முனிவர்பால் வந்து வணங்கி நடந்தது கூறி உதவி வேண்டினான். முனிவர் பிரானும் உளங்கனிந்து அவனி சூழ் கடல் நீரெல்லாம் அங்கையில் உழுந்தளவாக அமைத்து வடவைத் தீயை நினைந்து ஆசமனம் (உட்கொள்ளுதல்) செய்துவிடக் கடல் நீர் "அறத்தை மறந்து ஈட்டுவாருடைய செல்வம் மறைந்தது" போல மறைந்தது.

பின்னர் இந்திரன் விருத்திரனை நீர் வற்றிய கடலில் தேடினான். விருத்திரன் அங்கோரு மலையின் நடுவில் இருந்து தவஞ் செய்திருந்தான். அது கண்ட இந்திரன் வெகுண்டு வஜ்ஜிராயுதத்தால் அவன் தலையைக் கொய்தான். விருத்திரன் இறந்தான். தவநிலையில் இருந்த விருத்திரனைக் கொன்றதால் இந்திரனுக்கும் பிரமகத்தி என்ற பாவம் பிடித்தது. அது காரணமாக, பைத்தியம் பிடித்த நிலையில் இந்திரன் இருந்தான். மார்பைத் தட்டுவான். கண்ணை உருத்துப் பார்ப்பான். வம்மென்று வாய் மடிப்பான். பல்லைக் கடிப்பான். ஓடுவான். மீளுவான். கோதித்து எழுவான். சிரிப்பான். சீறுவான். இப்படிப் பலவாறு துன்பப்பட்டான். ஒருநாள் ஒரு குளத்தில் விழுந்து அங்குள்ள தாமரை நாளத்தில் நுழைந்து மறைந்து விட்டான். இந்திரன் உலகு இந்திரனில்லாது சந்திரனில்லா வானம்போல் வறண்டது. தேவர்கள் யாவரும் வருந்தினர்.

(தொடரும்)

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 21 | துன்முகி ஆண்டு தைத் திங்கள் ஜனவரி-1957 | இதழ் 10

## திருப்புகழ்

திருச்சேந்தூர்

அருணமணி மேவு பூஷித ம்ருகமத படீர லேபன
அபிநவ விசால பூரண
அம்பொற் கும்பத் தனமோதி
அளிகுலவு மாதர்லீலையின் முழுகியபி ஷேக மீதென
அறவுமுற வாடி நீடிய
அங்கைக் கொங்கைக் கிதமாகி
இருணிறைய மோதிமாலிகை சருவியுறவா னவேளையி
லிழைகலைய மாத ரார்வழி
யின்புற் றன்புற் றழியாநீள்
இரவுபகல் மோக னாகியெ படியில்மடி யாமல்
[யானுமுன்
இணையடிகள் பாடி வாழஎ
னெஞ்சிற் செஞ்சொற் றருவாயே
தருணமணி யாட ராவணி குடிலசடி லாதியோதிய
சதுர்மறையி னாதி யாகிய
சங்கத் துங்கக் குழையாளர்
தருமுருக மேக சாயலர் தமரமக ராழி சூழ்புவி
தனைமுழுதும் வாரி யேயமு
துண்டிட் டண்டர்க் கருள்கூரும்

**செருமுதலி மேவு மாவலி யதிமதக போல மாமலை**
**தெளிவினுடன் மூல மேயென**
**முந்தச் சிந்தித் தருள்மாயன்**
**திருமருக சூரன்மார்பொடு சிலையுருவவேலையேவிய**
**ஜெயசரவ ணும னேகர**
**செந்திற் கந்தப் பெருமாளே.**

## பதவுரை

தருண=இளமையையும், மணி=இரத்னமணிகளையும், ஆடு=ஆடலையும் உடைய, அராஅணி=பாம்பையணிந்துள்ள, குடில சடில ஆதி=வளைந்த சடையையுடைய ஆதிப் பொருளும், ஓதிய சதுர் மறையின் ஆதியாகிய=ஓதியுள்ள நான்கு வேதங்களின் முதற்பொருளும், சங்க துங்க குழையாளர்=தூய சங்கினாலாகிய குழையையணிந்தவருமாகிய சிவபெருமான், தரு முருக=தந்த முருகக்கடவுளே! மேக சாயலர்=நீலமேக நிறத்தினரும், தமர=ஒலியுடன் கூடிய, மகர ஆழி சூழ் புவிதனை முழுதும்=மகரமீன்கள் வாழ்கின்ற கடல் சூழ்ந்த மண்ணுலகமெல்லாம், வாரியே அமுது உண்டிட்டு=எடுத்து அமுதம் போல் உண்டவரும், அண்டர்க்கு அருள்கூரும்=தேவர்கட்கு அருள்மிகுதியாகப் புரிபவரும், செருமுதலி=போருக்குத் தலைவரும், மேவு=விரும்பிய, மாவலி=பெரியவலிமையையும், அதிமத கபோல=அதிக மதத்தைக் கொண்ட கன்னத்தையும் கொண்ட, மாமலை=பெரிய மலைபோன்ற கஜேந்திரயானை, தெளிவினுடன்=தெளிந்த அறிவோடு, மூலமே என=ஆதிமூலப் பொருளே! என்று அழைக்க, முந்த சிந்தித்து அருள்மாயன்=முற்பட்டு கருணையுடன் நினைத்து அருள் புரிந்த திருமாலின், திருமருக=திருமருகரே! சூரன் மார்பொடு=சூரனுடைய மார்பும், சிலை உருவ=கிரவுஞ்ச மலையும் உருவுமாறு, வேலை ஏவிய=வேற்படையை ஏவிய, ஜெயசரவண=ஜெயசரவணா! வெற்றியுடைய சரவணக்கடவுளே! மனோகர=மனத்திற்கு இன்பந்தருபவரே! செந்தில் கந்த=திருச்செந்தூரில் வாழுங் கந்தவேளே! பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! அருணமணி மேவுபூஷித=சிவந்த இரத்தினமணிகளால் அலங்கரிக்கப்பட்டதாய், ம்ருகமத=கஸ்தூரியும், படீர=சந்தனமும் சேர்ந்த, லேபன=கலவையணிந்ததாய், அபிநவ=புதுமை வாய்ந்ததாய், விசால=அகன்றதும், பூரண=நிறைந்ததும், அம்பொன் கும்ப=அழகிய பொற்குடம் போன்றதுமாகிய, தனம் மோதி=தனங்களில் மோதப்பட்டு, அளிகுலவு மாதர் லீலையின்=ஆசையுடன் குலாவுகின்ற பொதுமாதர்களின் விளையாட்டில், அபிஷேகம் ஈது என முழுகி=திருமஞ்சனம் இதுவே என்று முழுகி, அறவும் உறவு ஆடி=மிகவும் அவர்களுடன் உறவு கொண்டு, நீடிய அங்கை கொங்கைக்கு=நீண்ட அழகிய கைக்கும் தனத்துக்கும், இதம் ஆகி=இன்பம் பூண்டவனாய், இருள் நிறை அம் ஓதி=இருள்



நிறைந்த அழகிய கூந்தலின், மாலிகை=பூமாலை, சருவி உறவாடும் வேளையில், கொஞ்சி உறவு கொள்ளும் வேளையில், இழை கலைய=ஆபரணங்களுடன் கலைய, மாதரார்வழி=பெண்களிடத்தே, இன்புற்று அன்புற்று அழியா=இன்பத்தை யடைந்தும் அன்புகொண்டும் அழிகின்ற வனாகி, நீள் இரவு பகல் மோகன் ஆகியே=நீண்ட இரவு பகலும் மோகங் கொண்டவனாகி, படியில் மடியாமல்=இந்த உலகில் வீணே மாண்டு போகாமல், யானும் உன் இணையடிகள் பாடி வாழ=அடியேனும் உமது இரு திருவடிகளைப் பாடி வாழுமாறு, என் நெஞ்சில் செஞ்சொல்=எனது உள்ளத்தில் செவ்விய சொற்களை, தருவாயே=தந்தருள்வீர்.

## பொழிப்புரை

இளமையையும் இரத்தினத்தையும் ஆடுகின்ற தன்மையையும் உடைய பாம்பையணிந்த வளைந்த சடையையுடைய முதல்வரும், ஓதிய நான்கு வேதங்களின் முதற்பொருளானவரும், சங்க வெண்குழை யணிந்தவருமாகிய சிவபெருமான் பெற்ற முருகக் கடவுளே! நீலமேக வண்ணரும் மகர மீன்கள் வாழ்கின்ற ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த உலக முழுவதும் வாரியுண்டவரும், அமரர்க்கு அருள்புரிகின்றவரும், போருக்கு முதல்வரும், விரும்பிய பெருவலிமையும் நிறைந்த மதம் பொழியுங் கன்னமும் உடைய மலை போன்ற யானையாகிய கஜேந்திரன், தெளிந்த அறிவுடன் ஆதிமூலமே என்றழைத்தவுடன், முற்பட்டு கருணையுடன் நினைத்து வந்து அருள்புரிந்தவருமாகிய திருமாலின் திருமருகரே! சூரனுடைய மார்பும் கிரவுஞ்சமலையும் தொளைபடுமாறு வேலை விடுத்தருளிய வெற்றிக்கடவுளே! சரவணபவரே! மனத்திற்கு மகிழ்ச்சியைத் தருபவரே! திருச்செந்தூரில் எழுந்தருளிய கந்தவேளே! பெருமிதம் உடையவரே! சிவந்த இரத்தின மணிகளால் அலங்கரிக்கப்பட்டதும், கஸ்தூரி சந்தனம் இவைகளின் கலவை பூசினதும், புதுமை வாய்ந்ததும், அகன்றதும், நிறைந்ததுமான அழகிய பொற் குடம் போன்ற தனங்களின் மீது மோதி, ஆசையோடு குலாவுகின்ற அம்மாதர்களது விளையாட்டில் இதுவே திருமஞ்சனம் என்று முழுகி, அவர்களுடன் மிகவும் கலந்து உறவாடி, அவர்களுடைய அங்கைக்கும் கொங்கைக்கும் இன்பம் பூண்டவனாய், இருள் நிறைந்த அழகிய கூந்தலில் உள்ள மாலை, கோஞ்சிக் குலவி உறவுகொள்ளும் வேளையில் ஆபரணங்களுடன் கலைய, மாதர்களின் வசப்பட்டு இன்புற்றும் துன்புற்றும் நீண்ட இரவும் பகலும் மோகங்கொண்டவனாய் இப்பூமியில் வீணே இறந்து போகாமல், அடியேனும் தேவரீருடைய இரண்டு திருவடிகளைப் பாடி வாழுமாறு எளியேனுடைய உள்ளத்தில் இனிய சொற்களைத் தந்து ஆட்கொள்ளுவீர்.

## விரிவுரை

**அருணமணி மேவு பூஷித:—**

விலைமகளிர் தம்மை நாடிவரும் ஆடவரை மயக்கும் போருட்டு சிவந்த இரத்தினமணிகள் பதித்த ஆபரணங்களை மார்பில் அணிந்திருப்பார்கள்.

**ம்ருகமத படீர லேபன:—**

கஸ்தூரி சந்தனம் முதலியவை கலந்துள்ள கலவைச் சாந்தினைப் பூசிக் கோண்டிருப்பர்.

**அபிநவ விசால பூரண அம்போற்கும்பத்தனம்:—**

அப் போதுமகளிரது தனங்கள் புதுமையும் விசாலமும் நிறைவும் உடையதாய் தங்கக் குடம் போன்று இலகி இளைஞரை மயக்கும்.

**அளிகுலவு மாதர் லீலையின்.........அறவு முறவாடி:—**

ஆசையுடன் குலாவுகின்ற அப் போதுமாதர்களின் சரச விளையாட்டில், இதுவே பேரிய அபிஷேகம் என்று கருதி அதிலேயே விடர்கள் முழுகி, இரவு பகலாக உறவாடி யுழலுவர்.

**இருணிறைய மோதி:—**

இருள் நிறை அம் ஓதி.

ஓதி—பேண்களின் கூந்தல். இருண்ட கரிய குழல்.

**மோகனுகியே படியில் மடியாமல்:—**

மகளிர் மோகமேற்கோண்டு சதா அந்த இருள்வழி யுழன்று அடியேன் இவ்வுலகில் இறந்து வீணாகக்கூடாது.

**இணையடிகள் பாடி வாழ:—**

முருகா! உனது திருவடிகளைப் புகழ்ந்துபாடி வாழவேணும். 'பாடும்பணியே பணியா வருள்வாய்' நீ. பாடு வோர்க்கு எல்லா நலன்களையும் அருளுகின்றவன். ஆதலின் உன்னையே பாடி உய்வு பேறுவேன்.

**என்நேஞ்சிற் சேஞ்சோல் தருவாயே:—**

சோல் என்பது சிறந்த சேல்வம். ஏனைய சேல்வங்கள் எல்லாவற்றினுந் தலையாய சேல்வம். அதனைச் சிலரே பேற் றனர். போற் சேல்வம் அழியும்; சோற் சேல்வம் அழியாது. அநுமனைக் கண்டு இராமர் "யார்கோல் இச்சோல்லின் சேல வன்" என்று வியந்து கூறுகின்ருர். அதனைக் கூறிய கம்பரும் ஒரு சோல்லின் சேல்வர்; சேக்கிழார் பேருமான் பேரிய சோற் சேல்வர்.



சோல்லில் இனிமையுந் தனிமையும் மிகுதியாய போழுது அது சேஞ்சோலாகின்றது. தமிழுக்கே உரிய தனிப் பேருமை சேஞ்சோல். அருணகிரியார் சேந்தில் திருப்புகழில் நான்கு திசைகளைப் பற்றிக் கூற வருகின்ருர். ஏனைய திசைகளை மேல் திசை கீழ்திசை வடதிசை என்று கூறினர். தேன்திசையை மட்டும் போதுவாகத் தேன்திசை என்று கூருமல் "சேஞ்சோல் மாதிசை" என்று கூறினுர். பேருமை மிகுந்த திசை என்றும் குறிப்பிடுவான் வேண்டி மா திசை என்ருர்.

சேஞ்சோல் என்ருல் தமிழ் என்றே போருளாகும். "சேஞ் சோல் புனைமாலை சிறந்திட" என்கின்ருர் கந்தர் அநுபூதியில்.

இத்தகைய சிறந்த சேஞ்சோற்றமிழை அடியேனுக்கு அருள்புரிவீர் என்று இப்பாடலில் சுவாமிகள் வேண்டுகின்ருர். எல்லோரும் வேஞ்சோல்லை விடுத்து சேஞ்சோல்லை யடுத்து நலம் பேறுதல் வேண்டும்.

**தருண மணி யாடராவணி:—**

சிவபேருமான் தலைமீதுள்ள நாகம் இளமையானது; இரத் தின மணியை உடையது; அழகியது. அது பேருமான் முடியில் இனிது படமேடுத்து ஆடுகின்றது. அவரும் ஆட, சடைமீது அரவமும் ஆடுகின்றது.

**குடில சடையாதி:—**

இறைவன் ஆடுவதனுல் சடையும் வளைவாக அசைந்து ஆடு கின்றது. அப்பரமபதியே எப்போருட்குந் தலைவர் ஆதலால் ஆதி என்றனர். திருவள்ளுவரும் "ஆதிபகவன்" என்பார்.

**ஓதிய சதுர்மறையின் ஆதி:—**

அவரே வேத முதல்வருமாவார். வேதங்கள் நான்கும் அப்பரமனையே பரம் போருள் என்று வழுத்துகின்றன.

உமாபதயே பசுபதயே நமோ நம:
ருதம் ஸத்யம் பரம்ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்களம்
ஊர்த்வ ரேதம் விருபாக்ஷம் விச்வருபாயவை நம:
ஸர்வோவை ருத்ரஸ் தஸ்மை ருத்ராய நமோ அஸ்து.
—தைத்திரீயாருண சாகை நாராயணம்.

"உமாபதிக்கு, பசுபதிக்கு வணக்கம்; சத்தியவசனத்திற் சத்தியமாயுள்ள பரப்பிரம்மமும், கிருஷ்ணபிங்கல நிறமுடைய புருடனும், மேல் நோக்கிய ரேதசையுடையவனும், விசுவரூப னும் ஆகிய நேற்றிக் கண்ணனுக்கு வணக்கம்" என்பது இதன் போருள்.

**சங்கத்துங்கக் குழையாளர்:—**

சிவபேருமான் தமது திருச் சேவியில் பரிசுத்தமான சங்கி ஞலாய குழையையணிந்திருக்கின்ருர். "சங்கவேண் குழை

யோர் காதிற் கோமாற்கே'' என்று திருநாவுக்கரசு நாயனுர் கூறுகின்ருர்.

**மேகசாயலர்:—**

திருமால் மேகநிறமுடையவர். இது தட்பத்தின் சொருபம் என்பதை உணர்த்துகின்றது. ''மஞ்சு நிறம்புனைபவன்'' என்று திருப்பரங்குன்றத் திருப்புகழிலும் கூறுகின்றனர். ''மஞ்சேனத் திரண்ட கோலமேனிய'' என்கின்ருர் கம்பநாடரும்.

**தமரமகராழி சூழ்புவிதனை முழுதும் வாரியேயமுதுண்டு:—**

ஒலியையும் மகரமீனையும் தன்னகத்தே கொண்டது கடல். அக்கடலால் சூழப்பட்டது உலகம். இவ்வுலகமுழுவதும் ஒரு கவளமாக எடுத்துத் திருமால் உண்டார். உலகமெல்லாம் பிரளய காலத்தில் அவர் திருவுதரத்துள் ஒடுங்குகின்றன.

**அண்டர்க் கருள்கூரும்:—**

நற்குணசீலர்களாகிய தேவர்கட்குத் திருமால் மிகுந்த அருள்புரிந்து ஆட்கொள்கின்றனர்; தேவசகாயர். இனி அண்டர் என்பதற்கு யாதவர் எனப் பொருள் கொண்டு யாதவர்க்கு அருள் புரிந்தார் எனினும் பொருந்தும்.

**மூலமே என...அருள்மாயன்:—**

நெடிய மடுவில் தனது காலை முதலை பற்றி இழுத்தபோது கஜேந்திரம் என்ற மதயானை தெளிந்த அறிவுடன் ''ஆதிமூலம்'' என்று அழைத்தது. அக் குரலைக் கேட்ட அரவணைச் செல்வராம் அரிகேசன் ஓடிவந்து முதலையைக் கொன்று யானைக்கு அருள் புரிந்தனர்.

''மதசிகரி கதறிமுது முதலைகவர் தர நெடிய
மடு நடுவில் வெருவி ஒரு விசையாதி மூலமென
வருகருணை வரதன்''

—திருவகுப்பு.

**மனோகர:—**

மனதிற்கு இன்பத்தைத் தருபவர்.

''என்று முளானே மனோகர வயலூரா''

—திருப்புகழ்.

**கந்தப் பெருமாளே:—**

''பார்வதி! நின் மைந்தன் மூவுலகினும் பராக்கிரமத்துடன் நிகரின்றி சஞ்சரிக்கின்றமையால் கந்தன் எனப்படுகின்றனன்'' என்று உமாநாயகன் உமாதேவியிடம் உரைத்தருளினுர் எனக் கந்தபுராணம் சம்பவகாண்டம், 35ம் அத்யாயத்தில் 11வது சுலோகம் கூறுகிறது.

''சேயவன் வடிவமாறும் திரட்டி நீ ஒன்ருய்ச் செய்தாய்
ஆயதனுலே கந்த னெனும் நாமம் பெற்ருன்''

என்பது தென்மொழிக் கந்தபுராணம்.



# கற்பு

## '' மாதரசி ''

(உ0கம் பக்கத் தொடர்ச்சி)

சதானந்தன் வடதிசை நோக்கிச் செல்லுவானுயினுன். வழிநடையில் மனதைப் பிறவிடயங்களில் செலுத்தாமல் வள்ளி மணவாளன் திருவடியைச் சிந்தித்த வண்ணமாகச் சென்ருன். அவன் நாவில் முருகனுடைய திருவாறெழுத்து நீங்கா துறைந்தது.

கதிகாட்டும் ஓரெழுத் தோரெழுத் தேவஜ்ர காயந்தரும்
நிதிகாட்டும் ஓரெழுத் தோரெழுத்தேஉள் நிரப்பும்அருள்
மதிகாட்டும் ஓரெழுத் தோரெழுத் தேஎன்னுள் வைத்தபொற்ருள்
துதிகாட்டு மேருக! நின்னு றெழுத்துள்ள சூத்திரமே.

என்ற திருவாக்கின்படி சடக்கரமந்திரமே எல்லா நலன்களையும் தரவல்லது. கோடிப் பிறப்புக்களில் செய்த புண்ணியப் பயன் ஒருங்கு திரண்டு நின்ற உத்தமர்க்கே அந்த ஆறெழுத்தை உன்னும் பெருவாய்ப்பு கிடைக்கும்.

மாதவத்தால் மங்களாம்பிகை பெற்ற மைந்தன் நமது சதானந்தன். நல்வினைப் பயனுல் மந்திர நாயகமாகிய சடக்கரத்தை மறவாது உச்சரித்த வண்ணம் வழிநடந்தான். அதனுல் வழியில் யாதொரு இடரும் இன்றி நன்மையே விளைந்தது. அவன் செல்லும் பாலைவன மெல்லாம் சோலைவனமாகியது. கொடிய விலங்குகளும் விலகிச் சென்றன. அங்கங்கே அவனைக் கண்டார் பரிந்து உபசரித்தார்கள். பசி தாகம் முதலிய இடர் இன்றிச் சென்ருன்.

''முருகையா! பன்னிருகையா. ஓயாத பிறவிச் சுழல் காற்றில் சிறியேன் துரும்பாய்க் கிடந்து அலைந்து உலைந்து இளைத்து விட்டேன்.

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

ஸ்கந்தம் என்னும் வடசொல் தோள் எனப் பொருள்படும். தோள் வரையிலும் உமாதேவியாரால் ஒருங்குறச் சேர்க்கப் பட்ட திருவுருவம் உடையான் கந்தன் என அறிக.

### *கருத்துரை*

**சிவகுமாரரே! மால்மருகரே! செந்திற் கடவுளே! ஆசையிற்பட்டு அழியாமல் அடியேன் செந்தமிழால் பாடி உய்ய அருளுவீர்.**

விதிகாணும் உடம்பை விடா வினையேன்
கதிகாண மலர்க்கழல் என்றருள்வாய்
மதிவாணுதல் வள்ளியை யல்லது பின்
துதியாவிரதா சுரபூபதியே!

கருணைக்கடலே! பிறவிப் பெருங்கடலினின்றும் அடியேன் உய்ந்து கரை யேறுமாறு அருள்புரிவாய் ஞானபண்டிதா என்று துதி செய்து கொண்டே சென்றனன்.

செல்லும்போது ஒரு பெரிய முள் காலில் தைத்தது. முருகா என்று கீழே வீழ்ந்தான். மெல்ல முள்ளைப்பிடுங்கினான். அப்போது உயிர் துடித்தது. "தேவாதிதேவா! இந்த முள்ளைப்பிடுங்கும் போதே இந்த வேதனை விளைகின்றதே. நாளை இயமன் வந்து என் உடம்பில் உள்ள உயிரைப் பிடுங்கும்போது எத்துணை வேதனை விளையுமோ? ஐயனே! அடியேன் அந்தவேதனையை எவ்வாறு தாங்குவேன்!

"மைவருங் கண்டத்தர் மைந்த கந்தா என்று வாழ்த்தும் இந்தக்
கைவருந் தொண்டன்றி மற்றறியேன் கற்ற கல்வியும் போய்
பைவருங் கேளும் பதியுங்கதறப் பழகிநிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய் விடும் போதுன் அடைக்கலமே"

சுவாமி! அடியேன் உன் அடைக்கலம். என்னைக் கை நழுவ விடாதே. காத்தருள்வது நின் கடன்" என்று தொழுதான். அழுதான். மீளவும் நடந்தான்.

இங்ஙனம் சதானந்தன் பல நாள்கள் நடந்து, பல காதங்கள் கடந்து வங்கநாட்டையடைந்து. வங்கநாட்டின் தலைநகரமாகிய வங்கபுரியை நண்ணினான். மிகப்பெரிய நகரம்; அந்தணர் மறுகும் அரசர் மறுகும் ஆவண மறுகும் அணி புரிந்திருந்தன; சாலைகளும் சோலைகளும் நிறைந்திருந்தன.

வழிநடந்து அயர்ந்த சதானந்தன் அந்நகரத்தில் வாழும் முதலமைச்சனுடைய மாளிகையின் முன் ஒரு மேடையில் அமர்ந்து இளைப்பாறினான்.

* * * * * *

வங்க நாட்டையாளும் மன்னன் **வீரசேகரன்** தோள்வலியும் வாள்வலியும் மிக்கவன். வேந்தர்பலர் பணிந்து கப்பஞ் செலுத்த தண்மதியக்குடை நிழற்கீழ் வையம் புரக்கும் மாசிலா மன்னன். அவன் செங்கோல் கோணாது மக்களை அறநெறி நிறுத்தி அருளுடையோனாய் அரசுபுரிந்து வந்தனன். அம்மன்னவனுக்கு ஆண்மகவு பிறக்கவில்லை. அரிய தவத்தால் தாமரையிருந்த தையலே வந்து அவதரித்தது போன்ற ஒரு தனிமகள் பிறந்தாள்.



அம் மங்கை நல்லாளுக்கு மாதரசி என்று பேர் சூட்டினான். உலகம்புரக்கும் உத்தமவேந்தன் மகள் பெண்ணுலகிற்கே ஒரு திலகம் போன்று வளர்ந்தாள். அவள்பால் ஒரு தெய்வீக சக்தி மிளிர்ந்தது. அவளைக் கண்ட தாய் தந்தையர் மனங் குளிர்ந்தது. அவள் தளர்நடையிட்டபோது கற்புத் தெய்வம் உருவெடுத்து நடப்பது போல் இருந்தது. கரும்புங் கசக்கும் அளவில் அவளுடைய குரல் அமைந்திருந்தது. கனியமுதமன்ன இனிய குரல் கொண்டு அவள் மழலை மொழியால் பேசும்போது கல்லும் மண்ணும் உருகும்.

மாணிக்கமணியைக் கடைந்து ஒரு சிலையாகச் செய்தது போன்ற திருவுருவுடன் விளங்கினாள். தனித்தனியே ஆசிரியர்கள் வந்து, இலக்கணம், இலக்கியம், சங்கீதம், வீணை, நடனம், தையல், முதலிய கலைகளைப் பயிற்றுவித்தார்கள். அவளுக்குக் கல்வி கற்பூரமலையில் தீப்பிடிப்பது போல் எளிதாக நிறைவதாயிற்று; கூர்மையுடைய அறிவும், நேர்மையுடைய நடையும் உடைய மாதரசி எல்லோரும் மனங்களிக்கும் முறையில் பல கலைகளிலும் தேர்ச்சி பெற்றாள்.

**மாதரசி**க்குப் பதின்மூன்றாவது ஆண்டு எய்தியது. மங்கைப் பருவம் அடைந்தாள். அப்போது அவள் லட்சுமியின் பிரதிபிம்பம் போல் காட்சியளித்தாள். அடக்கமும் பொறுமையும் அன்பும் அறிவும் அழகும் பண்பும் அவளுக்கு அணிகலன்களாக விளங்கின.

அவளை மாதவத்தால் மகளாகப் பெற்ற வங்கதேய மன்னவனாகிய வீரசேகரன், வேறு குழந்தைகள் இன்மையாலும், குணக்குன்றமாக மகள் விளங்கியபடியாலும் அவள்மீது அளவு கடந்த பட்சம் வைத்திருந்தான். தனது புதல்வியின் அறிவு அழகு முதலிய குணநலன்களுக்கு ஏற்றவன் எங்கே என்று நாடிக்கொண்டிருந்தான். பெண் பெற்ற அனைவர்கட்குமே இப்படி ஒரு கவலையுண்டு. நமது மகளுக்கு உத்தமமான கணவன் அமைய வேண்டுமே என்று எண்ணுவதும், அப்படி அமையாமையால் வருந்துவதும் இயல்பு.

ஒருநாள் மந்திரி **மகரசேனனை** நோக்கி "அன்புள்ள அமைச்சரே! நமது செல்வப்புதல்வி மாதரசிக்குத் தக்க மணமகனைத் தேடி அவள் திருமணத்தைச் செவ்வையாக முடித்துத் தருவது உமது கடமை. எனக்கோ மகன் இல்லை. மகனும் மகளும் அவள்தானே, அவள் திருமணத்தைச் சிறப்பாக நடத்த வேணும். அன்றியும் உத்தமமான அறிவு நிறைந்த ஒருவனுக்கு நமது மாதரசியைத் தந்து மருகனுக்கு மகுடாபிஷேகமும் செய்விக்க வேணும். தாங்கள் இது விஷயத்தில் சற்று அக்கரை எடுத்துக் கொள்ளும்" என்றான்.

அவள் "ஆமாம் நமது மகனுக்கு ஒன்று விட்டு ஒருநாள் காக்காவலி வருவது வழக்கமாயிற்றே. இவன் அறிவிலும்அசடன். இராஜாவுடைய குழந்தையின் அறிவு எங்கே? இந்த மண்டு எங்கே? சிறிதும் பொருந்தாதே. காக்காவலி வருகின்ற இவனுக்கு கல்யாணம் புரிந்து என்ன செய்வது? வேண்டாம் இந்த யோசனை. யார் பெண்ணாக இருந்தால் என்ன? வீணே ஒரு பெண்ணைக் கெடுக்கக் கூடாது" என்றாள்.

"அடி பயித்தியமே! வாயை மூடிக்கொண்டிரு. காக்காவலி வந்தால் என்ன? கல்யாணம் முடிந்தபின் மன்னர் தன் மருமகனுடைய வியாதியைப் போக்கத் தக்க முயற்சி யெடுப்பார். இந்த வியாதி திருமணத்திற்குப் பிறகு ஏற்பட்டது என்று கூறி விடுவோம். எப்படியும் கல்யாணம் நடந்துவிடட்டும். இந்த வாய்ப்பை விட்டுவிடக் கூடாது. நான் உன்னிடத்திலே சொன்னதே பிழையாகி விட்டது. நல்ல காரியம் நடக்கட்டும்; நமது மகன் அரசனாகும் பாக்கியத்தை யடையட்டும்" என்று மந்திரி கூறினான்.

இவ்வாறு படங்களை ஆயத்தம் புரிந்து கொண்டு சில தினங்களுக்கு முன் அரண்மனையிலே அரசனை அமைச்சன் சந்தித்தான்.

"வாரும்; மந்திரியாரே! என்ன வரன் ஏதாவது தக்கமுறையில் அமைந்ததா? முயற்சி செய்தீரா?"

"மன்னர் பெருமானே! தாங்கள் அடியேனுக்குக் கட்டளை யிட்டபின் அந்த விஷயத்தில் நான் ஊக்க மில்லாமல் இருப்பேனா? பற்பல தூதர்களை யனுப்பி பல அரசகுமாரர்களுடைய படங்களை வாங்கி வந்துளேன். அவைகளைப் பார்த்து, தாங்களும் மகாராணியாரும் எந்த அரசகுமாரனைத் தேர்ந்து எடுக்கின்றீர்களோ? அந்த குமாரனுக்குத் திருமணம் புரிந்து விடலாம்" என்று அமைச்சன் கூறி, தான் தயார் செய்த படங்களை ஒவ்வொன்றாகக் காட்டினான்"

மன்னனுக்கு அந்தப்படங்களில் உள்ள ஒருவனையாவது பிடிக்கவில்லை. ஏன்? மந்திரி ஒவ்வொரு குற்றங் குறை காட்டி எழுதியுள்ளான் அல்லவா? இறுதியில் மந்திரி தன் மகனுடைய படத்தை எடுத்துக் காட்டினான். மன்னவன் கண்டு, "மந்திரி! இது உன் மகன் படமா? நன்றாக இருக்கின்றதே. பேஷ், பேஷ்; கையில் வெண்ணெயை வைத்துக்கொண்டு நாம் நெய்க்கு ஏன் அலையவேண்டும்? உனது மகன் சிறந்தவனாக இருப்பானுயின் அவனுக்கே முடித்துவிடலாம். நாளைக்கு உன் மகனை யழைத்து வா. நானும் ராணியும் பார்த்து முடிவு செய்வோம்" என்று அரசன் உரைத்தான். மந்திரிக்கு மட்டற்ற மகிழ்ச்சி. "தனது தந்திரம் பலித்துவிட்டது. இனி மன்னன் மகள் நமது மகனுக்குத் தான். நமது மகனே மன்னனாகிவிட்டால் - நாம் வைத்தது

சட்டந்தானே. சகல போக பாக்கியங்களும் நம்முடையதுதான்'' என்று கருதி களிபேருவகை யுற்றான்.

மறுநாள் தன்மகனை ஆடையணிகலன்களால் நன்கு அலங்கரித்தான். ''மகனே! மன்னர் மகளை உனக்குத் தர இசைந்திருக்கின்றார். உன்னைக் காண விரும்புகின்றார். அங்கே நீ ஒன்றும் அசட்டுத் தனமாக நடந்து கொள்ளாதே. 'பே, பே' என்று விழிக்காதே. அவர் ஏதாவது கேட்டால் கேட்டதற்கு மட்டும் பதில் சொல். ஒன்று கிடக்க ஒன்றைச் சொல்லாதே. சமர்த்தாக நடந்துகொள்'' என்று நன்மதி நவின்று அரண்மனைக்கு அழைத்துச் சென்றான்.

மன்னன், மந்திரி மகனை நோக்கி, இரண்டொரு வினாக்களை வினவினார். அவன் குருட்டுப் பூனை விட்டத்தில் ஏறியதுபோல் தக்கவிடை கூறினான். அரசர் மகிழ்ச்சியுற்றார். அரசமாதேவியும் ''மாப்பிள்ளை நன்றாகத்தான் இருக்கின்றார். அடக்கமாக இருக்கின்றார். இவருக்கே நமது புதல்வியைத் திருமணம் புரிந்து வைப்போம்'' என்றாள்.

மந்திரிமகனுக்கு மாதரசியைத் திருமணம் செய்து தருவதாக முடிவு செய்தபின் ஜோதிடரை அழைத்து மணமக்களுடைய நாம நட்சத்திரம் முதலியவைகளுக்குரிய தாராபலன் சந்திர பலன் இவைகளைப் பார்த்துத் திருமணம் புரிய ஒரு நாள் குறிப்பிடப்பட்டது. மந்திரி தனக்குள் அந்த நாளை விரல் விட்டுப்பார்த்தான். அன்று தன் மகனுக்குக் காக்காவலி வருகின்ற நாள். என்ன செய்வான்? மெல்ல அந்த நாளை மாற்றி வைக்கலாமே என்றான். வேந்தனும் ஜோதிடர்களும் அந்த நாள்தான் எல்லாப் பொருத்தங்களும் அமைந்திருக்கின்றன; அதனை மாற்றக் கூடாது என்று கூறிவிட்டார்கள். மந்திரிக்கு மறுக்கமுடியவில்லை. இஞ்சி தின்ற மந்தி போல் விழித்தான். மகனுடன் மாளிகை சென்றான். ஒருபுறம் தன் மகனுக்கு மன்னன் மகளும் அரச பதவியும் வருகின்றனவே என்று மகிழ்ச்சி. மற்றொருபுறம் திருமணத்தன்று காக்காவலி வருமே; இவன் எப்படித் தாலிகட்டப் போகின்றான். பெரிய சங்கடமாக இருக்குமே'' என்று கவலை. மகிழ்ச்சிக்கும் கவலைக்கும் இடையே நின்று அவன் இடர்ப்பட்டான். முடிவில் தெய்வம் விட்டதுபோல் ஆகட்டும் என்று எண்ணினான்.

மன்னன் திருமணத்திற்குரிய திட்டங்களை இட்டான். அதற்குரிய கருமங்களைத் துரிதமாகப் புரியலானான். திருமண ஓலை பல தேச மன்னர்கட்கும், பல பிரபுக்களுக்கும், பற்பல புலவர்கட்கும், உற்றார் உறவினர்கட்கும் சென்றது. திருமணப்பந்தர் மிகவுயர்ந்த முறையில் இட்டு அலங்கரித்தனர். திருமணத்திற்குரிய சாதனங்களையெல்லாம் ஆயத்தம் புரிந்தார்கள். அந்த நகரம் அமராவதிபோல் விளங்கியது. ஊரெங்கும் ஒரே மகிழ்ச்சி.



மந்திரிமகன் பிரதாபசீலனை காக்காவலி நோய் வழக்கம் போல் கல்யாண மாப்பிள்ளையாயிற்றே என்று தயவு தாட்சண்யம் பார்க்காமல் ஒன்றுவிட்டு ஒரு நாள் வந்து வாட்டிக் கொண்டிருந்தது. அது கண்டு மந்திரி மனம் வருந்தியது. எப்படியும் திருமணத்தைத் தடையின்றி முடித்துவிட வேண்டும். பிறகு காக்காவலி வந்தாலும் கவலையில்லை. முகூர்த்தத்தன்று இந்தவலி வந்துவிடுமே. என்ன செய்வது? அதற்கு ஏதாவது ஒரு தகுந்த வழி செய்ய வேணும்'' என்று இடையறாது அது பற்றிச் சிந்தித்த வண்ணமாகவே இருந்தான்.

திருமண நாள் நெருங்கிக்கொண்டே வந்தது. அரசர்களும் புலவர்களும் பெரிய பெரிய அறிஞர்களும் வந்து குவிந்தார்கள். நகரில் எங்கும் இடமின்றி ஒரே நெருக்கம். நாலாபக்கங்களிலும் மேளதாளங்கள் முழங்கிய வண்ணம் இருந்தன. எங்கும் கான மழையும், தான மழையும் பொழிந்தன.

நாளை திருமணம். இரவு 12 மணி. மந்திரி மகரசேனனுக்கு உறக்கம்வரவில்லை. மனம் பதறியது. ''விடிந்தால் நமதுமகனுக்குக் காக்காவலி வந்துவிடுமே; கல்யாணப் பந்தரில் வந்துவிட்டால் என்ன விபரீதம் விளையுமோ? மன்னர் கோபம் வடவாமுகாக்கினியைக் காட்டிலும் கொடியது ஆயிற்றே. நேரம் செல்லச் செல்ல என்மனம் குமுறுகின்றதே. நான் ஏன் இந்தக் கருமத்தில் இறங்கினேன். துன்பத்தை நானே தேடிக் கொண்டேனே. என் செய்வேன்? ஈசன்தான் ஏதாவது வழிவிட வேணும்'' என்று எண்ணி உள்ளம் உலைந்து மெல்லத் தனது மாளிகையின் முன்புறம் வந்தான்.

முன்புறம் உள்ள மண்டபத்தில் விண்ணுலகிலிருந்து வந்த இந்திர குமாரனைப் போலும், கந்தவேளைப் போலவும் சதானந்தன் அமர்ந்திருந்தான். அவன் காசி போவதற்காகத் தாய் தந்தையர்பால் விடை பெற்றுக் கொண்டு சடக்கர மந்திரம் உச்சரித்த வண்ணம், வேத கானத்துடன் வழிநடந்து, இளைப்புற்று அங்கே வந்து தங்கினான். அவன் முகாரவிந்தத்தில் அறிவு ஒளி வீசிக் கொண்டிருந்தது. அழகு வெள்ளம் வழிந்து கொண்டிருந்தது. சொல்ல முடியாத ஒரு கவர்ச்சியுடன் திகழ்ந்தனன். அவனுடைய தோற்றம், தோற்றத்தில் திகழும் ஏற்றம் ஆகிய இவைகளை மந்திரி கண்டனன்.

''ஐயா! வணக்கம். தாங்கள் எந்தவூர்? தங்கள் பேர் யாது? இங்கு எங்கு வந்தீர்? எங்கு போகின்றீர்?''

''வணக்கம். நான் இருப்பது திருத்தணிகை. அது முருகனுடைய ஐந்தாவது படைவீடு. என் பேர் சதானந்தன். அந்தணர் குலத்தில் வந்தவன். இங்கு இப்போதுதான் வந்தேன். காசி யாத்திரை போகின்றேன். இடையில் இன்று இங்கு தங்கி நாளை போக நினைவு ஐயா! இந்தவூரில் ஏதாவது திருவிழாவா?

ஊரேங்கும் ஒரே குதூகலமாக இருக்கின்றதே. அலங்காரமும் மேளமும் சங்கீதமும் ஆடலும் பாடலுமாக இருக்கின்றனவே? இங்கு என்ன விசேடம்?''

''ஐயா! இந்த நகரையாளுகின்ற மன்னர் வீரசேகரர். அவருக்கு ஒரே புதல்வி. அப் பெண்மணியின் பேர் மாதரசி. எல்லா நலன்களும் அமையப் பெற்ற நங்கையரசி. நான் இந்த மன்னரின் முதலமைச்சன்; என் பேர் மகரசேனன். எனக்கும் ஒரேமகன். அவன்பேர் பிரதாபசீலன். நல்ல அழகும் குணமும் படைத்தவன். எனது புதல்வனுக்கு மன்னருடைய மகளை மணஞ் செய்ய எல்லா ஏற்பாடுகளும் நடந்துவிட்டன. அதிகாலையில் முகூர்த்தம்.

ஐயா! இதுபரமரகசியமாக இருக்கவேணும். என்மகனுக்கு உடல் நலமில்லை. நாளை காக்காவலி வந்துவிடும். திருமாங்கல்ய தாரணம் புரிய இயலாது. நீர் எனக்காக ஒரு பெரிய உதவி புரிய வேணும். உமக்கு முதல் மந்திரியாகிய நான் எல்லா உதவிகளும் புரிவேன். உம்முடைய காசியாத்திரைக்குச் சகலஉபகாரங்களுஞ் செய்வேன். இன்னும் உமக்கு என்ன வேண்டுமானாலும் செய்யத் தயார். நீர் செய்யும் உதவியை வெளியார் அறியக்கூடாது. மெத்த மறைமுகமாக இருக்கவேணும்.

''காலத்தினுற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது''

என்று வள்ளுவப் பெருந்தகையார் கூறுகின்ருர். நீர் எனக்கு உதவி செய்வதாக வாக்களித்தால் போதும். ஐயா! என்மனம் பேயாய் அலைகின்றது. அலைகடல் துரும்பாகக் கிடந்து உலகின் றேன். கடலிடை வீழ்ந்து தத்தளிக்கின்ற ஒருவனுக்குப் படகு கிடைத்தது போல், நீர் இந்த வேளை இங்கு வந்தீர். எல்லாம் ஈசன் செயல்.''

''ஐயா! நான் என்ன உதவி செய்ய வேணும்? அதனைச் சொல்லும். என்னுல் முடிந்த உதவியை நிச்சயமாகச் செய்வேன்'' ''பரோபகாரார்த்தம் இதம் சரீரம்'' என்பதனை நான் அறிவேன். கவலைப்பட வேண்டாம். வளவள என்று விஷயத்தை வளர்த்திச் சொல்ல வேண்டாம். நான் என்ன உதவி செய்ய வேண்டும் என்பதனைக்கூறும். அரசரிடம் முகூர்த்த நாளை மாற்றிவைக்கச் சொல்லட்டுமா? அல்லது தக்க மருத்துவர்களை அழைத்து வந்து காக்காவலி தீர ஏதாவது முயற்சி செய்ய வேணுமா? ஆனல் அந்தவலி தீராத நோய் என்று குறிப்பினுல் அறிகின்றேன்.''

''ஐயா! முகூர்த்த நாளை மாற்றக்கூடாது. ராஜ ராஜாக்கள் யாவரும் வந்து குழுமியாயிற்று. எனக்குச் சொல்லவே வாய் கூசுகின்றது. என்ருலும் சொல்லியே தீரவேண்டியதாக இருக்



கின்றது. விடியற்காலை முகூர்த்தம் என் மகனுக்கு என்று மன்னவர் அனுப்பியுள்ள ஆடை அணிகலன்களைத் தாங்கள் அணிந்து கொண்டு, என் மகன் போல் நடித்து, யானை மீது சென்று அரசகுமாரிக்குத் தாங்கள் திருமாங்கல்யத்தைத் தரித்து விடுங்கள். மாலை தங்களைக் காசிக்குப் பதினுயிரம் ரூபாய் வழிச் செலவுக்குத் தந்து அனுப்பிவிடுவேன். பின்னர் என் மகனை வைத்து மற்றச் சடங்குகளை நடத்திக்கொள்வேன்''

சதானந்தன் இதனைக் கேட்டுத் திடுக்கிட்டான். தனது ஜாதகத்தை நினைத்தான். களத்திர ஸ்தானம் தனக்கு வலிமை யாக இருப்பதையும் அரசகுமாரி மனைவியாக வருகின்றதையும், ஒருவன் தாலி கட்டுவது மற்ருெருவன் மனைவியாக வைத்து ஆள்வது என்பதையும் எண்ணி உள்ளுக்குள் சிரித்துக்கொண் டான். தனது உள்ளக் குறிப்பை வெளியே காட்டாது கூறுவானுயினுன்.

''ஐயா! தாங்கள் பெரியதோரு சிக்கலில் சிக்கியிருக்கின்றீர் என்பதனை அறிகின்றேன். உமது ஜாதகப்படி இப்போது உமக்கு மிகுந்த சிரமமான நேரம். தங்கள் கருத்தின்படியே நான் அரசகுமாரிக்குத் திருநாண்பூட்டுவது சரியா? நான் தாலி கட்டிய பின் அவளுடன் உன் மகன் வாழ்வது தரும விரோதம் அல்லவா? பிறன் மனைவியை நயந்த பாவம் ஆகுமே? நானே யாத்திரை புரியும் தவசீலன். தவவொழுக்கத்தில் உள்ள நான் தாலி கட்டு வதும் அத்தனைப் பொருத்தமாக இராது. நான் தாலி கட்டிய பெண்மணியுடன் உன்மகன் வாழ்வதும் மாதர் கற்பு நெறியைக் குலைத்ததாக முடியும். ஆகவே எப்படியாவது மகனுடைய நோயை மன்னருக்கு அறிவித்து, திருமண நாளைத் தள்ளி வைப் பதே நல்லது. அதனுல் ஒன்றும் பிழையில்லை. தசரத ராஜ குமாரருடைய மகுடாபிஷேகம் குறிப்பிட்ட நாளில் நடைபெற்ற தா? ஒன்றை நினைக்க அது ஒழிந்திட்டு ஒன்ருகும். எல்லாம் எனையாளும் ஈசன் செயல்''

''ஓய்! வீணே என் பகையைத் தேடிக் கொள்ளாதீர். பேசு வது முதல் மந்திரி என்பதை நினைவில் வைத்துக்கொள்ளும். நான் ஆலோசனை செய்யாமலா பேசுகின்றேன். மிகுந்த சிந்தனை செய்துதான் இந்த முடிவுக்கு வந்தேன். ஆகவே நீர் ஒன்றும் மறுத்துப் பேசக்கூடாது. என் சொற்படி கேட்டு திருமாங்கல்யந் தரித்து விட்டுப் பொன்னும் மணியும் பெற்றுக்கொண்டு நீர் செல் லும். மற்றவைகளை நான் பார்த்துக் கொள்வேன்''

சதானந்தன் இதுவுந் திருவருளின் செயலே. நாம் காசியில் சென்று பிதிர்க் கருமம் புரிவதாக நினைத்துள்ளோம். அதற் குரிய செம்பொன்னும் கிடைக்கின்றது. ஈசன் செயலை நம்மால் அறிய முடியுமா? நாம் மறுக்காமல் இசைவதுவே நலம்'' என்று எண்ணினுன். ''அமைச்சரே! நீர் வருந்த வேண்டாம். உமது

யணுகினுன். அரசமாதேவி பூரணகும்பம் ஏந்தி வரவேற்ருள். மண மண்டபத்தில் மணமகன் அமர்ந்தான். மணமகளை நன்கு அலங்கரித்து சகல மேளதாளங்களுடன் அழைத்து வந்து அவன் அருகில் அமர்த்தினுர்கள். தெய்வயானை யம்மையுடன் முருகன் திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளி யிருந்ததுபோல் அத் தோற்றம் விளங்கியது.

திருமணம் புரிந்து வைக்கும் ஆசிரியர் "ஓம் கம் கணபதயே நம:" என்று திருமணச் சடங்கைத் தொடங்கினுர். சதானந்தன் அவருக்குமுன் அம்மந்திரங்களைத் தானே கூறினுன். இனி அவருக்குத் தெரியாத மந்திரங்களையும் உரத்த குரலில் ஓதினுன்.

தனக்குக் கணவனுக வந்த மணமகனுடைய அழகு, அறிவு, செயல், அடக்கம், மந்திரங்களைக் கூறும் மாட்சி முதலிய நலன்களைக் கண்ட மணமகள் மாதரசி மட்டற்ற மகிழ்ச்சியடைந்தாள். கடைக்கண்ணுல் கணவனைக் கண்டு கண்டு களித்தாள். மது உண்ட வண்டுபோல் மயங்கினுள். அவளுடைய அழகிய திருமேனி மகிழ்ச்சியால் பூரித்தது. மணியதரம் துடித்தது. மகிழ்ச்சிக் கண்ணீர் துளித்தது.

கணகண என்று மங்கல ஒலி முழங்கத் திருமாங்கல்யத்தை மாதரசியின் கழுத்தில் பூட்டினுன். லாஜ ஓமம் நடந்தது. அம்மி மிதித்து அருந்ததியை வணங்குவித்தான். மணமக்கள் பால் பழம் உண்டார்கள். வந்தவர்க்கு மிகவுயர்ந்த முறையில் அறுசுவையுண்டி வழங்கப்பெற்றது. மாலை இன்னிசை அரங்கு நிகழ்ந்தது. வீரசேகர மன்னன் மாப்பிள்ளையைக் கண்டு அளவற்ற ஆனந்தங் கொண்டார். கல்யாணத்திற்கு வந்தவர்கள் யாவரும் மாப்பிள்ளையைப்பற்றியே வாயாரப் புகழ்ந்தார்கள். மணமகள் நிரம்பக் கொடுத்து வைத்தவள் என்ருர்கள். இராமனைக் கணவனுகக் கொண்ட சீதையைப் போலவும், துஷ்யந்தனைக் கொண்ட சகுந்தலையைப் போலவும் மாதரசி விளங்கினுள்.

சடங்குகள் தொடர்ந்து நடந்துகொண்டே யிருந்தன. அன்று இரவு சாந்தி முகூர்த்தத்திற்கும் மன்னன் ஏற்பாடு செய்து விட்டான். இப்படிச் செய்வான் என்று மந்திரி எதிர்பார்க்கவில்லை. மந்திரி திடுக்கிட்டுப் போனுன். என்ன செய்வான்? அவனுல் அதனைத் தடுக்க முடியாதல்லவா? அணைகடந்த வெள்ளத்தை உப்பு மூட்டையால் தடுக்க முடியுமா? மதயானையைச் சிலந்தி நூலால் தடுக்க முடியுமா? "நான் ஒன்று எண்ணினல் தெய்வம் ஒன்று எண்ணுகின்றதே", வழிப்போக்கன் தொட்டு அனுபவித்த அரசகுமாரியை நமது மகன் நாளைக்கு அடைவதா? என்றெல்லாம் எண்ணினுன்.

போற்றுதவர்களே இல்லை. இந்திரபோகமே தங்கள் பால் அமைந்துள்ளது. ஆனால் ஒரு குறையுளது. அதுவும் நீங்கி விட்டால் தாங்கள் பூலோக இந்திரனைப் போல இருக்கலாம்'' என்றான்.

அரசன், ''அப்பா! எனக்கு என்ன குறை? அதனைச்சொல்'' என்றான்.

குலாலன், '' அரசே! வேறு ஒன்றுமில்லை. நாடு நகரம் செல்வம் படை எல்லாம் அமைந்திருக்கின்றன. வெள்ளை யானை ஒன்றுதான் இல்லை. இந்திரனுக்கு வெள்ளையானை உண்டல்லவா! உங்கள்பால் கருமை யானைதானே இருக்கின்றது. நமது அரண்மனை ஏகாலியிடம் கூறி அந்த யானையை மெல்ல வெளுத்துத் தருமாறு கட்டளையிடுங்கள். வெளுத்துத் தந்துவிடுவான். பின்னர் வெள்ளையானையோடு கூடிய தாங்கள் பூலோக இந்திரன் என்ற புகழ் பெற்று விளங்குவீர்'' என்றான்.

மன்னன் சிறிது மதிநலம் குறைந்தவன். யானையை வெளுக்க வைக்க முடியுமா? என்ற அறிவு இல்லை. உடனே தனது அரண்மனை ஏகாலியை அழைத்து, '' அப்பா! ஏகாலி! நமது அரண்மனையில் உள்ள யானையைக் கொண்டு போய் எட்டுநாட்களுக்குள் வெளுத்துக் கொண்டு வா. வெள்ளை யானையாக விளங்கவேண்டும். நிரம்ப உனக்குப் பணந் தருவேன். காரியத்தை மட்டும் கருத்துடன் செய்து முடிக்கவேண்டும். இல்லையேல் சிரச்சேதஞ் செய்வேன். போய்வா'' என்றான்.

ஏகாலி இந்த உத்தரவைக் கேட்டு நடுங்கிவிட்டான் தனது வாழ்வு முடிந்தது என்று எண்ணினான். மறுத்துப் பேசுவதற்குத் தைரியமில்லை. தலை குனிந்தவண்ணம் ''நல்லது'' என்று கூறிவிட்டுப் புறப்பட்டான். அரண்மனையை விட்டுப் போகும்போது ஒருபுறம் குலாலன் நின்று அவனைக் கண்டு சிரித்தான். அதனை ஏகாலி கண்டான். அவன்தான் இந்த வினையை மூட்டினான் என்று ஊகத்தால் உணர்ந்தான். கடவுளை நினைந்து, '' தெய்வமே! நீதான் எனக்குத் துணை. உன்னையொழிய ஒருவரையும் நம்புகிலேன்'' என்று துதி செய்து கொண்டு சென்றான்.

ஏகாலி வீட்டின் பின்புறம் யானை நின்றுகொண்டிருந்தது. எட்டுநாள் கடந்தது. இன்று ஏகாலியின் தலைபோகும் என்று எண்ணி மகிழ்ந்தான் குலாலன். மெல்ல அரசனிடம் போனான். '' அரசே! தங்கள் கட்டளையை ஏகாலி நிறைவேற்றினானா? சுத்த சோம்பேறி அவன். தங்கள் கட்டளையில் கவனஞ் செலுத்தியதாகத் தெரியவில்லை'' என்று கூறினான்.

உடனே அரசன் ஏகாலியை அழைத்து, ''ஏகாலி! என்ன யானையை வெளுத்து விட்டனையா? இன்றுதானே எட்டாவது நாள்'' என்று கோபத்துடன் கேட்டான்.

ஏகாலி வணக்கமாக நின்று, ''மன்னர் பெருமானே! கருணை நிதியே! தங்கள் கட்டளையை நிறைவேற்ற நான் பின்னடைவேனோ? தங்கள் வாக்கு வேதத்திலும் மேலானதல்லவா? இது என்ன, யானையை வெளுப்பது ஒரு பெரிய காரியமா? சுலபமாகச் செய்து முடிப்பேன் ஆனால் ஒரு சிறு தடையுளது. துணிகளைப் பானையில் இட்டு அடுப்பில் வைத்து அவித்துத்தான் வெளுப்பது வழக்கம். அதுபோல் யானையையும் பானையில் வைத்து அடுப்பில் ஏற்றி அவித்துத்தான் வெளுக்கவேணும். நமது குயவனாரை யானையை வைத்து அவிப்பதற்கு ஏற்றவாறு ஒரு பானையைச் செய்து கொடுக்குமாறு ஏற்பாடு செய்யுங்கள். அன்றியும் பானையில் யானை ஏறினால் அப்பானை உடையாமல் கெட்டியாகவும் இருக்குமாறு செய்யச் சொல்லுங்கள், பானை வந்து விட்டால் ஒரே நாளில் வெளுத்து வெள்ளை யானையைக் கொணர்ந்து அரண்மனையில் கட்டுவேன்'' என்றான்.

உடனே அரசன் குலாலனை நோக்கி, ''அப்பா! ஏகாலி, சொல்வது நியாயந்தான். ஆடைகளைப் பானையில் இட்டுத்தானே அவிக்கின்றார்கள். ஆகவே யானைக்கு ஏற்ற பானையை உடனே செய்து கொடு. இல்லையேல் உன்னைச் சிரச்சேதம் செய்வேன்'' என்று கட்டளையிட்டான்.

இதனைக் கேட்ட குலாலன் நடுநடுங்கினான். வேலிக்கு இட்ட முள் காலுக்கு வந்தது போல ஆயிற்று. ஏகாலிக்கு இடர்புரிய நினைத்தான். அந்த இடர் அவனுக்கே வந்து சேர்ந்தது. என்ன செய்வான்? நரியைப்போல் விழித்துக் கொண்டு சென்றான். நேரே ஏகாலியின் வீட்டுக்குப் போய், ''தம்பி! இது என்னப்பா; பெரிய ஆபத்தில் என்னைச் சிக்கவைத்து விட்டனையே! யானைக்குப் பானை செய்ய முடியுமா? அரசனோ அறிவில்லாதவன். என் தலையை வெட்டி உருட்டி விடுவானே'' என்றான்.

''அண்ணே! நீ தானே முதலில் என் தலையை உருட்ட ஏற்பாடு செய்தாய். வினையை விதைத்தவன் வினையைத்தானே அறுப்பான். வேட்டியை வெளுத்துக் கொடுத்துச் சிவனே என்று இருக்கின்ற என்னை யானையை வெளுத்துத் தருமாறு அரசனிடம் கோள் மூட்டினாயல்லவா? நானும் ஒரு தொழிலாளி. நீயும் ஒரு தொழிலாளி. ஒரு தொழிலாளி மறுதொழிலாளிக்கு அனுகூலம் புரிவதா? பிரதிகூலம் புரிவதா? அண்ணே! நாமே நம்மில் ஒருவருக்கு ஒருவர் கேடு விளைவித்துக் கொண்டால் நாடு நலமுறுமா? ஒருவருக்கு ஒருவர் நன்மை செய்யாவிட்டாலும் தீமையாவது செய்யாமல் இருக்க வேண்டாமா? நீ என் வாழ்வில் கொள்ளி வைத்தாய்; காற்று வேகத்தால் உன் வாழ்வுக்கே அக் கொள்ளி வந்து சேர்ந்தது. இப்போது என்னிடம் வந்து மோதிக்கொண்டால் நான் என்ன செய்வேன்'' என்றான்.



தம்பி! உனக்கு ஒரு கோடி கும்பிடு போடுகின்றேன். அப்பா நான் பிள்ளைகுட்டிக்காரன். என் தலையைக் காப்பாற்று. என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

மறுநாள் ஏகாலி குலாலனாரையழைத்துக் கொண்டு அரசனிடம் சென்றான். வணங்கி நின்று, ''அரசே! குலாலனார் ஆனைக்கு ஏற்ற பானை செய்ய முயலும்போது இந்தத் தகவல் எப்படியோ இந்திரனிடம் எட்டிவிட்டது. பூலோகத்தில் தனக்குப் போட்டியாக இன்னொரு வெள்ளை யானை இருப்பது முறையல்ல. அப்படி இருக்குமானால் அந்த அரசனை உடனே கொன்று போடு என்று காலதூதனுக்குக் கட்டளையிட்டாராம். அதனையறிந்து தங்களிடம் கூறவந்தேன்'' என்றான்.

மன்னன் கேட்டு அஞ்சினான். ''ஓ! அப்படியா? ஆனால் யானையை வெளுக்க வைக்கும் முயற்சி வேண்டாம். உங்களுக்கு வீண் துன்பம் தந்து விட்டேன். இந்தா அதற்காக ஆளுக்கு ஆயிரம் வராகன். கொண்டு போய் சுகமாக இருங்கள்'' என்று பொருள் தந்தான். இருவரும் அப்பொருளைப் பெற்றுக் கொண்டு திரும்பினார்கள்.

ஏகாலி குயவனாரை நோக்கி, ''இப்போதாவது புத்தி வந்ததா? எப்போதும் ஒருவன் மற்றொருவனுக்கு உபகாரம் புரிந்து ஒற்றுமையாக வாழ வேண்டும். ''நாடெங்கும் வாழக் கேடொன்றுமில்லை'' என்பது ஆன்றோர் வாக்கு.

''பிறர்க்கின்னா முற்பகல் செய்யில் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்''

என்று திருவள்ளுவனார் கூறுகின்றார். பொறாமையால் பிறருக்குக் கேடு செய்தால், கேடு செய்கின்றவன்தான் கெடுவான். நம்மில் ஒற்றுமை வேண்டும். உலகிலே வாழ்வது சில காலந்தானே. ஒருவரையொருவர் பகைப்பதும், நிந்திப்பதும், பிறர் பொருளை அபகரிப்பதும் பெரும் பிழை. அதனால் இம்மையிலும், மறுமையிலும் அளவற்ற வேதனையடைகின்றான்.

தொழில் முறையில் நாம் வேறு வேறு பிரிவுபட்டிருப்பினும் மனித சமூகம் ஒன்றுதான் என்று கருத்து வேற்றுமையின்றி ஒருமைப்பாட்டுடன் வாழ வேண்டும். ஒருவனுக்கு ஒருவன் உபகரித்து அதனால் மகிழ்ச்சி அடைய வேண்டும். ஒருவனையொருவன் புகழ்ந்து மகிழ்தல் வேண்டும். அதுதான் மனிதப் பண்பாடு'' என்ற அறவுரைகளைக் கூறினான். அது கேட்டு குலாலனும் திருந்தினான். பின்னர் அவர்கள் ஒற்றுமையாக வாழ்ந்தார்கள்.

உ
முருகா

# திருவிளையாடற் புராணம்

( சிவக்கிழார் : திருநாவுக்கரசு )

( உகசு-ம் பக்கத் தொடர்ச்சி )

இந்தச் சமயத்தில் மண்ணுலகில் 100 அசுவமேதயாகங்கள்
செய்து முடித்து இந்திராணுக்கும் பெற்றியை நகுஷன் என்ற அர
சன் பெற்றிருந்தான். அவனைத் தேவர்கள் தங்கள் அரசனுகக்
கொண்டு முடி சூட்டினர். அவன் இந்திரன் ஆனதும் இந்திராணி
யை அடைய விரும்பி அவளுக்குச் சொல்லி யனுப்பினன். அந்
நங்கையும் வியாழ பகவானுகிய தங்கள் குருவின் பால் சென்று
"வணங்கிப் பெருமானே! என்னுயிர்த் துணைவனுன இந்திரன் ஒரு
வன் இருக்க, நான் இன்னொருவர்க்கு மனைவியாவது தரும நெறி
யன்றே என் செய்வேன்" என்று வருந்தினுள்.

பிருகஸ்பதி பகவான் (வியாழ பகவான்) அவளைத் தேற்றி
இந்திரனுனல் சப்தரிஷிகள் சுமக்கும் பல்லக்கில் தான் என்
விடுதி வருவார். அது போல் நீரும் வந்தால் ஏற்றுக் கொள்ளு
கிறேன் என்று தூதுவர் மூலம் நகுஷனுக்குச் சொல்லி யனுப்பு.
எல்லாம் நன்மையாய் முடியும் என்று கூறியனுப்ப இந்திராணி
யும் அவ்வாறே தன்னிருப்பிடம் வந்து நகுஷனுக்குச் சொல்லி
யனுப்பினுள். நகுஷன் மாதவர் எழுவர் பல்லக்குச் சுமக்க
இந்திராணி வீடு நாடி வந்தான். விரைந்து காமந் துய்க்கும்
ஆசையால் புனிதமாகிய மாதவரை எண்ணுது சீக்கிரம் என்ற
பொருள் தரும் சர்ப்ப, சர்ப்ப என்ற சொல்லால் வேகமாகப்போகு
மாறு கூறினுன். அம் முனிவருள் முதலில் சென்ற குறு முனிவர்
(அகத்தியர்) அவன் சிறு தன்மை கண்டு வெகுண்டு சர்ப்பமாகும்
படி சபித்தார். அவனும் பாம்பாய் ஒழிந்தான்.

பின்னர்த் தேவர்கள், வியாழ பகவானை யடைந்து குறை
யிரப்ப, வியாழ பகவானும் அவ் வாவிக் கரை சேர்ந்து இந்திர
னைக் கூவி யழைத்தார். அவனும் வந்தான். குரவனை வணங்
கினுன். பழி நீங்கும் மார்க்கம் கூற வேண்டினுன். குரவனும்
இப்பழி மண்மேல் அன்றித் தீராது. மண்ணுலகுக்கு வா என
அழைத்துக் கொண்டு வந்தார். இருவரும் மண்ணுலகு
சார்ந்து, கயிலை வெற்பைத் தாழ்ந்து, தென் திசை நோக்கிச்
சென்றுர்கள். கங்கை முதல் புனித தீர்த்தமெல்லாம் ஆடினுர்
கள். காசி முதல் பல புண்ணிய ஸ்தலங்களை யெல்லாம் வணங்கி
னுர்கள். தெற்கே, தமிழகத்தின் கண்ணுள்ள கடம்ப வனத்தை
யடையவே இந்திரனது பழிச் சுமை குறைந்து, அகன்றது
கண்டான். அளவிலாத சந்தோஷத்துடன் தன் ஆசான் அடி

1. மாதவர் எழுவர், அகத்தியர், ஆங்கீரசர், கோதமர், காசிபர்,
புலத்தியர், மார்க்கண்டர், வசிட்டர்.



பணிந்து நடந்தது கூற வியாழ பகவானும் இவ்விடத்தில் ஏதோ
ஒரு புனித ஸ்தலமும், தீர்த்தமும் உள எனக்கூறி இதனை
ஆராய்க! என, இந்திரன் தன் பணியாளர்கள் பலரால் தேடி
னுன். அவ்வனத்தில் அறிவில்லாதல் பெண் குரங்கு அருவி நீர்
தோய்ந்து அருவியில் உள்ள மணியெடுத்து பூச்சூட்டி வழி
படுகின்றது. ஒரு துறையில் யாளியும், யானை இவைகள் ஐக்கிய
மாக ஒன்றற்கொன்று நீர் முகந்து ஊட்டுகின்றன. புலியானது
தன் பாலை மானுக்கு ஊட்டுகின்றது. பாம்புக் குட்டி வெயிலில்
கிடந்து நெளிப்ப கருடன் தன் சிறகை விரித்து அதன்பால் நிழல்
செய்கின்றது. புறவை யொன்று நோயுற ஐயோ என்று மந்தி
சென்று தண்ணீர் கொண்டு ஊற்றுகிறது. மயில் தன் பேடை
யைத் தழுவி மணஞ் செய்யும் மணவறைக்கு விளக்காக விளங்க
அரவு மணியீன்று தருகின்றது. குயில் பாடுகின்றது. கிளி ஐந்
தெழுத்தை உச்சரிக்கின்றது. பூவை அம்மொழி கேட்டு உவக்
கின்றது. இத்தகு செயற்கரிய செயல்களைக் கண்டு களித்து
இந்திரனும் குரவனும் மகிழ்ந்து நிற்ப, அச்சமயத்தில் தூதுவர்
ஓடி வந்து இனிய பாலை யருந்துகின்ற ஒருவனுக்குத் தேனும்
சொரிந்தது போலக் கூறினுர்கள்.

மிக்க அதிசயமானதொரு காட்சி, இவ்வனத்திடை ஒரு
பொய்கையின் சார்பாய் கடம்பமரத்தின் நிழலிலே "ஒப்பில்
ஒளியாய் முளைத்த சிவலிங்க மொன்று கண்டோம்" என்று
கூறச் செவியில் அமுதம் பெற்றுற் போல மகிழ்ந்து இருவரும்
தூதுவருடன் தொடர்ந்து, உச்சிமேற் கரங்குவித்து உள்ளம்,
மெய், மொழி, கரணம், குணமூன்றும் ஒருமைப்படத் தொழுது
கொண்டே சென்று, வாவியில் மூழ்கிக் கடம்பவனத்திடை
நுழைந்து கடம்பவனத்தடிவாழும் கண்ணுதலைக் கண்ணுற்
ருர்கள்.

"அருவாகி யுருவாகி யருவுருவங் கடந்துண்மையறி வானந்த
உருவாகி யளவிறந்த உயிராகி யவ்வுயிர்க் கோருணர் வாய்ப்பூவின்
மருவாகிச் சராசரங்கள் அகிலமுந்தன்னிடை யுதித்தும் அடங்கநின்ற
கருவாகி முளைத்த சிவக்கொழுந்தை யாயிரங் கண்ணும் களிப்பக்
கண்டான்"

இந்திரன் கண்டு விழுந்து தொழுதான். களிப்புக் கடலில்
ஆழ்ந்தான். இறைவனுக்கு அர்ச்சிக்க உபகரணம் கொண்டு
வர அகன்ருன். அங்கே இறைவனருளால் பக்கத்திருந்த வா
வியில் சூரியன் உதித்தாற் போன்று பொன்தாமரை மலர் பூக்கக்
கண்டு மகிழ்ந்து கொய்து அவ்வாவிக்குப் பொற்றுமரை என்று
நாமம் சூட்டி நீர்முழுகி, நீர்கொணர்ந்து இறைவனை வழிபட்டு
ஏற்றிப் போற்றினுன். விதிப்படி வழிபட்ட இந்திரன் இறைவன்
முன்னின்று கண்ணீர் சொர சிரமேற் கைகூப்பி,

"அங்கணு போற்றி வாய்மை யாரணு போற்றி நாக
கங்கணு போற்றி மூல காரணு போற்றி நெற்றிச்
செங்கணு போற்றி யாதி சிவபரஞ் சுடரே போற்றி
எங்கணு யகனே போற்றி யீறிலா முதலே போற்றி.

யாவையும் படைப்பாய் போற்றி யாவையுந் துடைப்பாய் போற்றி
யாவையும் ஆனுய் போற்றி யாவையும் அல்லாய் போற்றி
யாவையும் அறிந்தாய் போற்றி யாவையும் மறந்தாய் போற்றி
யாவையும் புணர்ந்தாய் போற்றி யாவையும் பிரிந்தாய் போற்றி"

என்று இன்னவாறு பலபடத் துதித்தான். 'பெருமானே! துன்பத்தில் ஆழ்த்திய பிணியினின்று விடுவித்த சுந்தர விடங்கனே! கடம்பவனத்தரசே! போற்றி' என்று வணங்கினுன். "பெருமானே! பழியும் நீங்கிப் புண்ணியனுகிய நான் பொன்னடி பூசை செய்யும் பேறும் பெற்றேன்; இதனிலும் யான் பெறும் பேறு உளதோ? இவ்வாறே என்றும் பூசித்திருக்க அருள வேண்டும் என்று பிரார்த்திப்ப. இறைவன், "இந்திரா! இருதுவிற் சிறந்த வேனிற் காலத்தில் மாதத்திற் சிறந்த சித்திரையில் பௌர்ணமியோடு கூடிய சித்திரை நக்ஷத்திரத்தில் வந்து ஆண்டு தோறும் நீ அர்ச்சிப்பாயானுல் அதுவே, ஓராண்டுமுழுதும் நீ பூசித்த பயனைத்தரும். எனவே, சுவர்க்கம் சென்று தேவர்கள் ஏற்ற நம்மைச் சிந்தித்து வாழுதி; பின்னர். யாம் அப்போகங்கள் நின்னை விட்டு நீங்க, வீடு என்னும் மோக்ஷநிலையருளுவோம்" என்று அருளி விடைகொடுத்தார் விடையவர்.

இந்திரனும் கடம்பவனத்தீசர்க்கு தெய்வக்கம்மியனுல் சிறந்த விமானம் புதுக்கி இறைவனை வழிபட்டு தேவருலகு சென்று இந்திராணி வாழ்த்த வாழ்ந்து கடம்பவனத்தீசனை மறவாது இன்புற்று வாழ்ந்தான்.

(தொடரும்)

---

## ஆதிவயலூர் வெண்பா அந்தாதி

(கஅசும்பக்கத் தொடர்ச்சி)

இன்பத் திருவயலூர் எண்ணுதிருக் கோயிலின்கண்
மன்பத் தருக்கென்றே வாய்ந்தமரும்—முன்பித்தர்
ஈன்ற முருகா! எளியேன் றுயரகற்ற
ஆன்றவுனக் கேனுகா தா? 2.

ஆன வயலூரில் ஆர்ந்தமரும் ஆறுமுகா!
தீனனேனைக் காத்தருளுந் தேசிகனே!—கானவோரு
நற்குறத்தி காதலனே! நான்களிக்க மாமயின்மேல்
உற்றேனக்கு முன்வா உவந்து. 3.






# திருப்புகழமிர்தம்

" குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம் "

மலர் 21 | துன்முகி ஆண்டு மாசித் திங்கள் பிப்ரவரி-1957 | இதழ் 11


## திருப்புகழ்

திருச்செந்தூர்

அனைவரு மருண்ட ருண்டு கடிதென வெகுண்டி யம்ப
அமரஅடி பின்தொடர்ந்து பிணநாறு
அழுகுபிணி கொண்டுவிண்டு புழுவுடனெலும்பலம்பு
மவலவுட லஞ்சு மந்து தடுமாறி
மனைதொறு மிதம்ப கர்ந்து வரவர விருந்த ருந்தி
மனவழி திரிந்து மங்கும் வசைதீர
மறைசதுர் விதந்தெரிந்து வகைசிறு சதங்கை [கொஞ்சு
மலரடி வணங்க என்று பெறுவேனே
தினைமிசை சுகங்க டிந்த புனமயி லிளங்கு ரும்பை
திகழி ருதனம்பு ணர்ந்த திருமார்பா
ஜெகமுழுது முன்பு தும்பி முகவனொடு தந்தை முன்பு
திகிரிவலம் வந்த செம்பொன் மயில்வீரா
இனியகனி மந்தி சிந்து மலைகிழவ செந்தில் வந்த
இறைவகுக கந்த என்று மினையோனே
எழுகடலு மெண்சிலம்பு நிசிசரரும் அஞ்ச அஞ்சு
மிமையவரை யஞ்ச லென்ற பெருமாளே.

## பதவுரை

திணைமிசை சுகம் கடிந்த=திணைப்பயிர்மீது இருந்த கிளிகளை ஓட்டிய, புனமயில் இளங்குரும்பை திகழ்=புனத்தின்கண் மயில் போல் விளங்கிய வள்ளியம்மையாரது குரும்பைபோல் திகழ்கின்ற, இருதனம் புணர்ந்த=இரண்டு தனங்களுடன் புணர்கின்ற, திருமார்பா=அழகிய மார்பையுடையவரே! ஜெகமுழுதும்=உலகமுழுவதும், முன்பு=முன்னுளில், தும்பி முகவனொடு=யானைமுகமுடைய விநாயகருடன் போட்டியிட்டு, தந்தை முன்பு=சிவபெருமானுடைய முன்னிலையில், திகிரி வலம் வந்த=வட்டமாக வலம் வந்த, செம்பொன் மயில் வீரா=செம்பொன் நிறமுடைய மயிலையுடைய வீரரே! மந்தி இனிய கனி சிந்து=குரங்குகள் இனிமையான பழங்களை உதிர்க்கின்ற, மலைகிழவ=மலைநிலமாகிய குறிஞ்சி நிலத்திற்கு உரியவரே! செந்தில் வந்த=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள, இறைவ=இறைவரே! குக=குகப்பெருமானே, கந்த=கந்தக்கடவுளே! என்றும் இளையோனே=அகலாத இளமைப் பருவமுடையவரே! எழுகடலும்=ஏழுசமுத்திரங்களும், எண் சிலம்பும்=எட்டு குலமலைகளும், நிசிசரரும் அஞ்ச=இராக்கதர்களும் அஞ்சுமாறு, அஞ்சும் இமையவரை அஞ்சல் என்ற=பயந்து நின்ற தேவர்களை அஞ்சாதீர்கள் என்று அபயங் கொடுத்த, பெருமாளே=பெருமை மிகுந்தவரே! அனைவரும் மருண்டு அருண்டு=(எனக்கு உற்ற நோயைக் கண்டு) எல்லோரும் அச்சங்கொண்டு மனங் கலங்கியும், கடிது என வெகுண்டு இயம்ப=சீக்கிரம் விலகிப்போ என்று கோபித்துக் கூறவும், அமர அடி பின் தொடர்ந்து=நெருங்கி அவர்களது அடிப்பின்னே தொடர்ந்து சென்று, பிணநாறும் அழுகு பிணி கொண்டு=பிணம் போல் நாறுகின்ற அழுகிய தசையுடன் கூடிய நோயைக் கொண்டு, விண்டு புழுவுடன் எலும்பு அலம்பும்=புழு வெளிப்பட்டு எலும்புகள் நிலை குலைந்துள்ள, அவல உடலம் சுமந்து=துன்பத்தையுடைய உடம்பைச் சுமந்து கொண்டு, தடுமாறி=தடுமாற்றமுற்று, மனைதொறும் இதம் பகர்ந்து=வீடுகள்தோறும் சென்று இனிய வசனங்களைக்கூறி, வர வர விருந்து அருந்தி=நாள் போகப் போகப் புதிய புதிய வீடுகளில் உணவு வுண்டு, மன வழி திரிந்து மங்கும் வசை தீர=மனம் போன வழியில் சென்று திரிந்து கெடுகின்ற பழிப்பு நீங்குமாறு, மறை சதுர் விதம் தெரிந்து=நான்கு வேதங்களின் வகைகளை யறிந்து, வகை சிறு சதங்கை கொஞ்சு=முறைப்படி சிறிய சதங்கைகள் கொஞ்சி ஒலிக்கின்ற, மலரடி வணங்க=மலர் போன்ற தேவரீருடைய திருவடியை வணங்குகின்ற பேற்றினை, என்று பெறுவேனோ=அடியேன் எந்நாள் பெறுவேனோ?

## பொழிப்புரை

திணைப்பயிர் மீது அமர்ந்த கிளிகளையோட்டிட புனத்தில் வாழ்ந்த மயில் போன்ற வள்ளியம்மையாருடைய தென்னங் குரும்பையனைய இருதனபாரங்களுடன் கலந்த திருமார்பினை



யுடையவரே! சிவபெருமான் முன்னிலையில் யானைமுகப் பெருமானுடன் போட்டியிட்டு, உலகமுழுவதும் வட்டாகாரமாக வலம் வந்த செம்பொன்னிறமுடைய மயில்வாகனத்தையுடைய வீரமூர்த்தியே! குரங்குகள் இனிய கனிகளை உதிர்க்கின்ற மலைநிலத்திற்கு உரியவரே! திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள இறைவரே! குகப்பெருமானே! கந்தநாயகனே! என்றும் அகலாத இளமையுடையவரே! ஏழு சமுத்திரங்களும், எட்டு குலமலைகளும் அசுரர்களும் அஞ்சுமாறு, அஞ்சிநின்ற அமரர்களை அஞ்சேல் என்று உரைத்தருளிய பெருமிதம் உடையவரே! எனக்கு உற்ற பெருநோயைக் கண்டு யாவரும் அச்சமும் கலக்கமும் அடைந்து "விரைவில் விலகிப்போ" என்று கோபித்துக் கூறியும், நான் அவரை விடாது அவர் அடிப்பின் தொடர்ந்து சென்று, பிணம் போல் நாறுகின்ற அழுகிய சதையுடன் கூடிய நோயுடன், புழுக்கள் வெளிப்படவும் எலும்புகள் நிலைகுலையவும் துன்பத்துடன் கூடிய உடம்பைக் கொண்டு தடுமாற்றமுற்று, வீடுகள் தோறுஞ் சென்று இனிய சொற்களைக் கூறி, நாள் செல்லச் செல்ல புதிய புதிய இடங்கட்குச் சென்று உணவு வுண்டு, மனம் போன வழியில் திரிந்து அழிகின்ற பழிநீங்குமாறு, நான்கு வேதங்களின் வகைகளையறிந்து இனிமையாகக் கொஞ்சியொலிக்கின்ற சதங்கையுடன் கூடிய தேவரீருடைய திருவடிகளை வணங்கும் பெரும் பேற்றினை அடியேன் எந்நாள் பெறுவேனோ?

## விரிவுரை

**அனைவருமருண்டு அருண்டு:—**

பெருநோய் என்பது ஒரு கொடிய நோய்; அதற்குத் தொழுநோய் என்று ஒரு பேரும் உண்டு; ஏனைய நோய்கள் இந்த அரசநோயைக் கண்டால் தொழும். அதனால் தொழுநோய் எனப்பட்டது. இந்த நோயினால் பீடிக்கப்பட்ட ஒருவனைக் கண்ட எல்லோரும் அருவருப்புறுவர். ஆ இந்த நோய் நமக்கு ஒட்டிவரக்கூடாதே என்று அகலுவர்; அஞ்சுவர். அதன் கொடுமையைக் கண்டு மனம் மயங்குவர். இந்த நோயின் கொடுமையை அடிகளார் இந்தப் பாடலில் இரண்டு அடிகளில் கூறுகின்றனர்.

இந்த நோய் மூன்று காரணங்களால் வரும்;

(1) ஒன்று சிவஞானிகளாகிய உத்தம பக்தர்கள் மனங் கலங்குமாறு அபாண்டமான பழிச் சொல் கூறி எவன் பழிப்பானோ அவனுக்கு இநநோய் அணுகும்.

"அடியார்மனஞ் சலிக்க எவராகிலும் பழிக்க
அபராதம் வந்து கெட்ட பிணிமூடி
அனைவோரும் வந்து சிச்சி எனநால் வரும் பழிக்க
அனலோடழன்று செத்து விடுமாபோல்" —திருப்புகழ்

(2) உத்தமமான பதிவிரதைகளின் மனம் கோதிக்குமாறு எவன் நடப்பானோ அவனுக்கு இக் கோடிய நோய் சாரும்.

(3) இந்த இரண்டுபாவங்கள் இப் பிறப்பிலேயே வந்து சாரும். முற்பிறப்பில் பத்துக்கால்களை யுடைய நண்டைப் பிடித்து பத்துக்கால்களையும் ஒடித்து உண்டவனுக்கு கை கால்களில் உள்ள விரல்கள் அழுகி சங்குபோல் மழுமழு என்று இருக்கத் துக்கத்தைத் தரும் இத் தொழுநோய் வந்து துன்புறுத்தும்.

**அக்கேபோல் அங்கை யொழிய விரலழுகித்**
**துக்கத் தொழுநோய் எழுபவே—அக்கால்**
**அலவனைக் காதலித்துக் கால்முறித்துத் தின்ற**
**பழவினை வந்தடைந்தக் கால்.** —நாலடியார்.

**கடிதென வெகுண்டியம்ப:—**

பெருநோயாளன் அருகில் வந்தபோது, அருவருத்து, "அடேய்! கிட்டவராதே! சீக்கிரம் அப்பால் எட்டிப்போ" என்று வெகுண்டு உரைப்பார்கள்.

இயம்—மேளம். மேளம்போல் உரத்தகுரலில் உரைப்பார் அதனால் "இயம்ப" என்றனர்.

**அமர அடி பின் தொடர்ந்து:—**

கண்டவர்கள் கடிந்துரைத்தும் நோயாளன் குறிப்பறிந்து விலகிப் போகாமல் அவர்கள் பின்னர் சென்று வீண் தொந்தரவு தருவான்.

**பிணநாறும் அழுகு பிணி கொண்டு:—**

தொழுநோயினால் நிணங்கள் மிகுந்து, சதைகள் அழுகி உதிரமும் சீழும் வடிந்து, அதனால் பிணநாற்றம் வீசும். அந்த நாற்றத்தைக் கண்டு எல்லோரும் மிகவும் பழித்து, விலகிப் போவார்கள். அது கண்டு பிணியாளன் பெரும் வேதனையுறு வான்.

**விண்டுபுழுவுடன் எலும்பலம்பு:—**

தொழுநோயினால் ஏற்பட்ட புண்களில் புழுக்கள் பல நெளிந்து வெளிப்படவும், ஆழமான குழிகள் விழுந்து எலும்பு கள் தெரிந்து, அந்த எலும்புகள் நிலை குலைந்தும் நோயாளன் துன்பமுறுவன்.

**அவல வுடலஞ் சுமந்து தடுமாறி:—**

அவலம் - துன்பம்.

நோயால் துன்பமுற்ற இந்த உடம்பை மேலும் மேலும் சுமந்து நோயாளன் திரிவான். நோயுற்று, புண்பட்டுப் புழு நெளியப் பெருந்துன்பமுற்றாலும் "இந்த உடம்பு இனிவேண்டாம் மாள்வது நலம்" என்று துணியமாட்டான். இன்னும் சிலகாலம்



வாழவேண்டும் என்றே இப்பாரமான உடம்பைச் சுமந்து கொண்டு தடுமாறித் திரிவான்.

**மனைதோறுமிதம் பகர்ந்து வரவர விருந்தருந்தி:—**

வீடுகள் தோறும் சென்று, அவரவர்கட்கு ஏற்றவாறு இன்னுரை கூறி, பின்னர் வேறு வேறு புதிய புதிய வீடுகட்குச் சென்று உணவு அருந்தி அலைவர்.

**"அசனமிடுவார்கள் தங்கள் மனைகள் தலைவாசல் நின்று**
**அநுதினமு நாணமின்றி அழிவேனோ"**
—திருப்புகழ்.

**மனவழி திரிந்துமங்கும் வசைதீர:—**

மனம்போன போக்கெல்லாம் போய் இங்கும் அங்குமாகத் திரிந்து அழிகின்றதனால் வரும் பழிப்பு நீங்கவேணுமாயின் முருகன் பாதபங்கயங்களைப் பரவுதல்வேண்டும்.

**மறை சதுர் விதந் தெரிந்து வகை சிறுசதங்கை கொஞ்சு:—**

முருகப்பெருமானுடைய திருவடியில் விளங்கும் பொற் சதங்கைகள் நான்கு வேதங்களின் மந்திரங்களை ஒலித்துக் கொஞ்சுகின்றன.

**மலரடி வணங்க என்று பெறுவேனோ?**

பெறுகின்ற பேற்றினுக்கெல்லாம் பெரும் பேறு முருகன் அடியைப் பணியப் பெறுதலேயாம். அதுவே மானிடப் பிறப்பைப் பெற்றதன் பயனும். இனிப் பிறவாத பேற்றியை அது தரும்.

**பெறுதற் கரிய பிறவியைப் பெற்றுநின் சிற்றடியைக்**
**குறுகிப் பணிந்து பெறக்கற்றிலேன் மதகும்ப கம்பத்**
**தறுகட் சிறுகட் சங்க்ராமசயில சரசவல்லி**
**இறுகத் தழுவும் கடகாசல பன்னிருபுயனே.** —அலங்காரம்.

**தினமிசை சுகம் கடிந்த புனமயில்:—**

மெய்ஞ்ஞானமாகிய பயிரில் முத்திக் கதிரைப் பாழ்படுத்த வந்த காமக்ரோதாதி கிளிகளை பக்தியாகிய கவணிலே முருக நாமங்களாகிய கற்களை விட்டெறிந்து ஓட்டிய இச்சாசக்தியாகிய வள்ளியின் அபர பரஞானங்களாகிய இரு தனங்களால் தழுவப் பெற்ற தோள்களையுடையவன் முருகன்.

**செகமுழுது.........வலம்வந்த:—**

கனிகாரணமாக எங்கும் தானே நிறைந்தவன்; தன்னை யல்லால் உலகமில்லை என்ற தத்துவத்தை முருகப் பெருமான் காட்டியருளினர்.

**இனியகனி மந்தி சிந்து மலைகிழவ:—**

முருகனுக்கே உரிய நிலம் குறிஞ்சி.

சேயோன் மேய மைவரையுலகு —தொல்காப்பியம்.

அப்பெருமான் எழுந்தருளிய நிலம் மலை நிலம். அதுதானே உயர்ந்தது அவர் தேவசிகாமணி. தெய்வ நாயகன்.

"விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ"

என்கின்றார் நக்கீரர்.

திருந்தப் புவனங்கள் ஈன்ற பொற்பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டி லேறி யறுவர் கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழும்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவன் என்றோதும் குவலயமே. —அலங்காரம்.

அப்பெருமான் எழுந்தருளியுள்ள மலைகள் எல்லாம் இனிய கனிகளுடன் கூடியவை. பூத்துப் பழுத்துக் குலைகுலையாகக் குலுங்குகின்றன. மந்திகள் வந்து மரத்தைக் குலுக்கி உதிர்க்கின்றன. உதிர்ந்த கனிகளை உண்டு உவகையுறுகின்றன. எம்பெருமான் எழுந்தருளியுள்ள மலைகளில் உள்ள மந்திகளுக்குக் கூட பசிதாகமே கிடையா. அத்தனை வளமை.

இறைவ:—

எங்கும் எப்பொருட்கும் அப்பரமபதியே தலைவன். ஆறு சமயங்கட்கும் அதிபன்.

குக:— மலைக்குகைகளில் முருகன் எழுந்தருளி யிருப்பதன்றி, ஆன்மாக்களின் இதய குகைகளிலும் எழுந்தருளியிருக்கின்றான். அதனால் குகன் எனப் பெறுகின்றான்.

சத்யம் ஞான மநந்தம் ப்ரஹ்ம யோவேத
நிஹிதம் குஹாயாம் பரமேவ்யோமன்.

என்றுமிளையோனே:— —தைத்திரீயோபநிஷத்ஆனந்தவல்லி.

முருகன் என்றும் அகலாத இளமைக்காரன். குழந்தை வடிவில் விளங்கும குருநாதன். குமாரன் என்ற திருப்பெயருக்குரியவன்.

எழுகடலும் எண் சிலம்பும் நிசிசரரும் அஞ்ச அஞ்சும்
இமையவரை அஞ்சல் என்ற பெருமாளே:—

முருகன் வேலை எடுத்தவுடன் ஏழுகடல்களும் எட்டு மலைகளும் சூராதியவுணரும் அஞ்சினார்கள். அப்போது இமையவர்களை "அஞ்சல்" என்று அபயமருளி அருள்புரிந்தனர்.

### கருத்துரை

வள்ளி மணவாளரே! செந்திலாண்டவரே! குறிஞ்சிக் கிழவரே! தொழுநோய் தொடர்ந்து அழியாமல் உமது திருவடியைத் தொழ அருள்புரிவீர்.



## கற்பு

### " மாதரசி "

(உ௬௫-ம் பக்கத் தொடர்ச்சி)

தனியறையிலே இனிய பஞ்சணைமீது, கனியமுதமன்ன மாதரசியுடன் இருந்த சதானந்தனும் தடுமாற்றத்தை யடையவில்லை. சிறந்த மதிநலம் என்ற அங்குசத்தினால் ஐம்பொறிகளாகிய மதயானைகளையடக்கினான்.

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரன்என்னும் வைப்புக்கோர் வித்து"

என்கின்ற திருவள்ளுவரது திருவாக்குக்கு இலக்கியமாக நின்றான். அவளை உள்ளத்தினாலும் உடம்பினாலும் தீண்டினானில்லை.

"பெண்மணியே! உனக்குச் சில அறவுரைகளாகிய வேதாகமங்களின் சாரங்களில் ஒன்றை இப்போது உபதேசிக்கின்றேன். இன்பந்துய்க்க வேண்டும் என்றே எல்லாவுயிர்களும் விழைகின்றன. இன்பத்தை உயிர்கள் ஐம்பொறிகளின் மூலம் அநுபவிக்கின்றன. அதனால் இன்பங்கள் ஐந்துவிதமாகின்றன, (1) ஒன்று மிருதுவான பஞ்சு, மெல்லியகாற்று முதலியவைகள் உடம்பில் படுகின்ற போது வருகின்ற இன்பம் பரிச இன்பம். (2) இனியகனி, தேன் மற்றுமுளள அறுசுவையுணவு இவைகளையுண்ணுகின்றபோது வருகின்ற இன்பம். இது சுவையின்பம் (3) நறுமணங்களை மலர்களை மோந்து அதனால் பெறுகின்ற இன்பம் கந்த இன்பம். (4) அழகிய நந்தவனங்கள், கடல், ஓவியங்கள், சிற்பங்கள் கவின் மிகுந்த உருவங்களைக் காண்பதனால் வருகின்ற இன்பம் கண்ணினால வரும் உருவ இன்பம். (5) நல்ல சங்கீதம், வீணை, புல்லாங்குழல், மத்தளம் பிடில் முதலிய வாத்தியங்களைக் கேட்கும்போதும், குழந்தைகளின் மழலை மொழிகளைக் கேட்கும்போதும் வருகின்ற இன்பம் ஒலி இன்பம். இதுதான் இந்த ஐந்து இன்பங்களுக்குள் தலையாய இன்பம்.

"சுவையொளி ஊறு ஓசை நாற்றமிவ் வைந்தின்
வகை தெரிவான் கட்டே யுலகு"

என்று திருவள்ளுவர் இவைகளின் வகைகளைத் தெரிந்து அவற்றை முறையாக உணர்கின்றவனிடம் உலகம் அடங்குகின்றது எனக் கூறுகின்றார்.

இந்த ஐந்து பொறிகளால் துய்க்கின்ற இன்பங்கள் யாவும் ஒருகணத்தில் தோன்றி மறுகணத்தில் அழிகின்ற அற்ப இன்பங்களேயாகும்.

மெய் வாய் கண் நாசி செவி என்ற ஐம்பொறிகளாலும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் எனும் ஐம்புல இன்பங்களை யனுபவிக்

"அறிவை யறிவதுவே ஆகும் பொருள் என்று
உறுதி சொன்ன உண்மையினை ஒரும் நாள் எந்நாளோ"

ஆகவே அறிவையறிவதுவே பொருள். அதனால் வருகின்ற இன்பமே மேலான பேரின்பம். அந்த இன்பத்திற்கு ஈடான இன்பம் எங்கும் கிடையாது அது அழியாத அருளின்பம்.

"அறிவையறிபவரறியும் இன்பந்தனை" என்று அருணகிரி நாதர் வேறு ஒரு திருப்புகழிலும் கூறியிருக்கின்றார்.

அறிவையறிவது என்பது வெறும் பேச்சினால் அன்று; எழுத்தினாலன்று. அது அசைவற நின்று உணர்வினால் உணர்வது. அங்கே பேசா அநுபூதிபிறக்கும்; அங்கே கருவிகரணங்கள் யாவும் கழன்றுவிடும். ஒளியில் விளைந்த உயர்ஞான மலையின் மீது அளியில் விளைந்த ஆனந்தத்தேனை அங்கே பருகலாம். வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியில் அது கிடைக்கும்.

"சொல்லுகைக் கில்லை யென்று எல்லாம் இழந்து சும்மா இருக்கும்
எல்லையுட் செல்ல எனைவிட்டவா"

என்று அந்த அநுபவத்தை அருணகிரிநாதர் கூறுகின்றார். அதனை நாமும் பெறவேண்டும். அதற்குரிய சாதனைகளைச் செய்ய வேண்டும். அச் சாதனைகளைச் செய்வதற்காக வந்ததுவே இம் மானுடப் பிறப்பு. அதனால் தான் இந்த உடம்பு மேல் நோக்கி வளர்கின்றதாய் அமைந்துளது"

என்று தத்துவ ஞானத் தேன்மழையைப் பொழிந்தான். அந்த இன்ப ஞானமழையில் அவள் நனைந்து அமுந்தி கரை காணாத மகிழ்ச்சியை யடைந்தாள். அப்போது பொழுது புலர்ந்துவிட்டது. மாதரசி தனது மணவாளனுடைய மலரடிமீது வீழ்ந்து வணங்கினாள். "பெருமானே! அறிவின் சிகரமாகிய தங்களை நான் கணவனாகப் பெறும் பேறு பெற்றேன். என்ன புண்ணியஞ் செய்தேனோ? ஆ ஆ! என் தவமேதவம். தாங்கள் உபதேசித்த ஞானமொழிகள் சித்தத்தில் தித்திக்கின்றன. கேவலம் உடம்பால் வரும் இன்பத்தை அது வென்றுவிட்டது. தங்கள் உடைமையான இந்த உடம்பைத் தாங்கள் தீண்டாது. என் உள்ளத்தைத் தீண்டி உபதேசித்தீர்கள். இன்று என்னவோ சீக்கிரம் பொழுது விடிந்துவிட்டது" சூரியனுக்கு நேரம் தெரியவில்லை போலும். நாளை இரவு மீளவும் தங்களிடம் உபதேச மொழிகளைக் கேட்டு உய்வேன்" என்று அவன் கரமலரைப் பற்றித் தன் கண் மலரில் ஒத்திக் கொண்டாள். இன்ப அன்பு வெள்ளத்தில் மூழ்கினாள்.

மந்திரி தந்த பொன்னைக் கொண்டு காசியில் பல தான தருமங்களை நாள்தோறும் புரிந்துகொண்டிருந்தான். அங்கு வடமொழி வித்யாசாலைகளில் சென்று தனக்குள்ள வடமொழி ஞானத்தை மேலும் மேலும் வளர்த்துக்கொண்டான்.

"நமக்குள்ள ஆயுள் ஓராண்டு. ஜாதகம் ஒருபோதும் பொய்க்காது. ஜோதிடம் வேதபுருஷனுக்கு நேத்திரம். ஆதலால் மீட்டிங்கு வாரா நெறியைப் பெறவேண்டும்" என்று எண்ணி, இரவும் பகலும் உள்ளக் கோயிலில் முருகவேளை நிறுவி, சடக்கர மந்திரத்தை ஓதி சதா தியான சமாதியில் அமர்ந்திருந்தான். மார்க்கண்டேய முனிவரைப் போல் காட்சியளித்தான்.

வங்கபுரத்தில் மந்திரி மகரசேனன் மாளிகையில் மந்திரி மகன் பிரதாபசீலனை மணமகனாக நன்கு அலங்கரித்தார்கள். உயர்ந்த ஆடை அணிகலன்களால் ஒப்பனை செய்து கொண்ட அவன் மிக்க மகிழ்ச்சியும் அரசகுமாரியையடையப் போகின்றோம் என்ற குதூகலமும் உடையவனாய் எப்போது அந்த மாதரசியைக் காண்போம் என்று துடிதுடித்துக் கொண்டிருந்தான்.

அரச மாளிகையிலிருந்து மேளம் தாளம் யானை குதிரை பல்லக்கு முதலிய வரிசைகள் வந்தன. மந்திரி மகன் யானை மீது ஆரோகணித்தான். இளம் பெண்கள் பொற்கவரி வீசவும், ஆலவட்டம் அசைக்கவும், நடனம் ஆடவும், இன்னிசை பாடவும் மிகுந்த கோலாகலத்துடன் திருமண மண்டபத்தை யடைந்தான். அவனை மன்னர் வரவேற்றார். ஏறக்குறைய தோற்றம் ஒன்று போல் இருந்தபடியால் மன்னர் வேற்றுமையை யறியவில்லை. வேள்விக் குண்டத்துக்கு முன் மணமக்கள் அமர்ந்தார்கள். அக்கினிஹோத்திர ஔபாசனம் நடந்தது. நேற்று சதானந்தன் அம்மந்திரங்களை யெல்லாம் இனிய குரலில் தானே கூறினான். அச்சடங்குகளை யெல்லாம் தங்கு தடையின்றித் தானே செய்தான். அன்று பிரதாபசீலன் ஒரு மந்திரமும் கூறாமலும் சடங்குகளைச் செய்யத் தெரியாமலும் விழித்து தடுமாறினான். பெண்ணிருக்கும் பக்கமாக நெருங்கினான். அட்சதையைக் கும்பத்தின் மீது போடுமாறு காட்டினால் இவன் ஐயர் மீதே போட்டுவிட்டான். இவன் இப்படித் தடுமாறுவதையும் அறியாமையால் அசடுவழிவதையும் மாதரசி கவனித்தாள். அவளுக்கு ஒன்றும் விளங்கவில்லை. சிந்தனை செய்தாள். நேற்றுத் தன் கழுத்தில் திருப்பூட்டியவர் வேறு; இவன் வேறு என்பதை உணர்ந்தாள். எனினும் நன்கு தெளிந்தபின் தக்க தண்டனை தரவேண்டும் என்று எண்ணினாள். சிறிது ஒதுங்கி யமர்ந்தாள்.

மாப்பிள்ளைக்கு மணமகளே அன்னம் படைக்க வேணும் என்பது ஒரு மரபு. அவ்வாறு படைத்தாள். பிரதாபசீலன்

பிரதாபசீலன் திடுக்கிட்டான். அவள் ஐயுறுகின்றாள் என்பதனை யுணர்ந்தான். அவன் உடம்பு வேர்த்தது மெய் பதறியது. நா நடுங்கியது; ஒருவாறு சமாளித்துக் கொண்டான். "பெண்மாணிக்கமே! இது என்ன கேள்வி? உனக்கென்ன பயித்தியமா? என்னுடன் இப்படி ஏளனஞ் செய்யலாமா? தாலி கட்டியது நான்தான். வேறு ஒருவனைத் தாலி கட்டவைப்பது என்பது எங்கும் நடக்காததல்லவா? நாம் இருவரும் என்றும் மனம் ஒுமித்து இன்பவாழ்வில் வாழவேண்டும். என் காதற் கரும்பே நான்தான் உன் கழுத்தில் நேற்று தாலி கட்டினேன்" என்று உளறினன்.

மாதரசிக்கு சீற்றம் பொங்கி எழுந்தது. மகிடாசுரன்முன் நின்ற துர்க்காதேவிபோல் சீறினள். தன் இடையின் உள் செருகி வைத்திருந்த உடைவாளை உருவினள். பிரதாபசிலனுக்கு முன் ஓங்கினள். "மூடனே! இந்த உடைவாளால் உன்னைக் கண்டதுண்டமாக வெட்டியெறிவேன். உண்மையைச் சொன்னல் உயிர்ப்பிச்சை தருவேன்" என்று கூறி கர்ஜித்தாள்.

அவளுடைய கோபாக்கினி சொரியுங் கோலத்தையும் வடிவாளையுங் கண்ட பிரதாபசீலன் நடுங்கிவிட்டான். அந்த அதிர்ச்சியினல் மறுநாள் வரவேண்டிய காகாவலி அப்போதே வந்துவிட்டது. கீழேவிழுந்து கால்கைகளை ஆட்டிஉதைத்துக் கொண்டான். அதனைக் கண்டு மாதரசி மனம் பெரிதும் வருந்தினள். "அந்தோ! நான் அவசரப்பட்டுவிட்டேன். வடிவாளைக் காட்டிஅதட்டியதனல் இவன் இதனை அடைந்தான் போலும். நயமாகவே கேட்டு உண்மையை யுணர்ந்திருக்கவேண்டும். சற்று அவசரப்பட்டுவிட்டேன். இனி நாளை இரவுதானே இவனிடம் உண்மையையறியவேண்டும்" என்று எண்ணினள். கதவைத் திறந்தாள். தாய் தந்தையரை அழைத்தாள். அரசரும் அரசியும் படுக்கை வீட்டிற்குள் நுழைந்தார்கள். நிலத்தில் எருமைக் கன்றுக்குட்டி போல் கைகால்களை உதறிக் கொண்டு காகாவலியால் துடித்துக் கொண்டிருக்கின்ற மாப்பிள்ளையைக்கண்டு மனங்கலங்கினர்கள்.

ஒருவேளை மாதரசி தன் மகனைச் சந்தேகப்படுவாளோ? என்ன ஆகுமோ! என்று எண்ணி ஒருபுறம் ஒதுங்கியிருந்த மந்திரி வந்து மன்னனைத் தொழுது "திருமணச் சடங்கினையொட்டி பன்முறை நீராடியதனல் சீதளம் அதிகப்பட்டு இவ்வலி வந்தது போலும். முன் ஒரு முறை வந்தது." என்று கூறிப் பசப்பினன்.

"மந்திரியே! இவனை விரைவில் கொண்டுபோ" என்று அதட்டிக் கூறினள் மாதரசி. மன்னன், "அம்மா! என்ன இருந்தாலும் கணவன் அல்லவா? கணவனை ஒருமையில் பேசலாமா?" என்றார். "அப்பா, கற்பு நெறியை நான் நன்கு அறிவேன். அதில் அணுவளவும் பிழைபடேன்" என்று கூறிவிட்டு கலங்கிய கண்களுடன் வேறுபுறம் போனள். மந்திரி தன் மகனை ஏவலர்களைக் கொண்டு எழுப்பித்துத் தன் இல்லஞ் சென்றன்.

அவனுக்கு வேண்டியசிகிச்சைகளைச் செய்தான். விடிந்தது. வலியும் நின்றது. தெளிவு பெற்றான் பிரதாபசீலன். மந்திரி மகனை நோக்கி, "என் அருமை மகனே! இரவு என்ன நடந்தது. இன்று வரவேண்டிய வலி நேற்று இரவே வருவதற்குக் காரணம் யாது? அரசகுமாரி உன்மீது ஒன்றும் ஐயப்படவில்லையே. அன்புடன் பேசினாளா?'' என்று கேட்டான்.

"அப்பா! அந்தக் கதையையா கேட்கின்றீர்? முதலில் அவள் என்மீது அன்பாகத்தான் இருந்தாள். பின்னர் எப்படியோ சந்தேகப்பட்டாள் போல் இருக்கின்றது. என்னைத் தொடவேயில்லை. நேற்று என் கழுத்தில் தாலி பூட்டியது யார்? என்று வெகுண்டு வினவினாள். "நான்தான் தாலி கட்டினேன்'' என்று நான் கூறினேன். அவள் வடிவாளை எடுத்து ஓங்கினாள். அப்பா! உடனே எனக்குக் காகாவலி வந்துவிட்டது'' என்றான் பிரதாபசீலன். மந்திரிக்குத் தலை சுற்றியது. ஓ நம் குடி கெட்டது. மன்னவன் மகள் எப்படியோ தெரிந்து கொண்டாள். என்ன செய்வாளோ? என்ன தண்டனை கிடைக்குமோ? என்று கருதி ஏங்கினான்.

இரவெல்லாம் உறங்காமல் வேதனைக் கடலில் அழுந்திக் கண்ணீர் வடித்தாள் மாதரசி. அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. தனக்குத் திருப்பூட்டிய திருவாளன் யார்? இந்த மந்திரி மகன் மக்குப் பிண்டமாக இருக்கின்றானே? இவனுக்குப் பதிலாக அவர் வந்து திருப் பூட்டக் காரணம் யாது? மெல்ல அந்த மடையனை நயமாகக் கேட்டு அறிய வேண்டும்'' என்று எண்ணிக் கண்ணீர் சிந்தினாள்.

காலையில் நீராடினாள். வழக்கம்போல் மேளதாளத்துடன் மணமகனை அழைத்து வந்தார்கள். மாப்பிள்ளை மணவறையில் அமர்ந்தார். அக்கினிஹோத்திர ஔபாசனம் முன்னாள்போல் நிகழ்ந்தது.

அன்றிரவு படுக்கையறைக்குள் இருவரும் நுழைந்தார்கள்; மாதரசி மனதைச் சாந்தப் படுத்திக்கொண்டாள். மந்திரி மகனைப் பஞ்சணையில் இருக்குமாறு செய்தாள். "எனது அன்புக்குரிய ஆர்வலரே! நேற்று உம்மிடம் சிறிது அவசரமாக நடந்து கொண்டேன். தாங்கள் வருத்தப்பட வேண்டாம். என்னமோ விதியின் விளையாட்டை யாரால் வெல்ல முடியும். பாவம் தங்கட்குக் காகாவலி வருவது வழக்கம் போல் தோன்றுகின்றது. தாங்கள் வருந்த வேண்டாம். வினையை அனுபவித்துத் தானே தீர்க்க வேணும். தாங்கள் தயவு செய்து உள்ளதை மட்டும் உள்ளபடி உரையும். அன்று தாலி கட்டியது யார்? என் அன்பு உமக்கு என்றும் நிலைத்திருக்க வேண்டுமானால் உண்மையைக் கூறும்'' என்று வினவினாள்.



மந்திரி மகன், "நீங்கள் ஒன்றும் பிழையாக எண்ணாமல் இருந்தால் கூறுவேன். எனக்கு ஒருநாள் விட்டு ஒருநாள் காக்காவலி வருவது வழக்கம். முகூர்த்தத்தன்று எனக்கு வலி வரும். அதனால் என் தந்தை மிகவும் யோசித்தார். அவன் ஒரு யாத்ரீகன்; பிராம்மணன். காசியாத்திரை போகும் வழியில் எங்கள் வீட்டிற்கு முன் தங்கினான். அவனைத் தாலி கட்டுமாறு என் பிதா ஏற்பாடு செய்தார். அவன் தாலி கட்டியதற்காகப் பதினாயிரம் பொன்கொடுத்து அவனைக்காசிக்கு அனுப்பிவிட்டார். ஆதலால் அவனைப்பற்றி இனி சிந்தித்துப் பயனில்லை. எனக்காக அவன் தாலி கட்டினான். ஒருவன் பணம் வாங்கினால் பத்திரம் எழுதத் தெரிந்தவனைக் கொண்டு எழுதுவதும், நியாய ஸ்தலத்தில் கட்சிக்காரனுக்காக வழக்கறிஞர் வாதிப்பதும் வழக்கந் தானே. ஆதலால் நீயும் நானும் இனிமனமொத்து வாழவேண்டும். இந்த இரகசியத்தை வெளிப்படுத்த வேண்டாம். நல்ல மணி மந்திர ஔஷதங்களால் இந்த வலி நீங்கிப் போகும்'' என்றான்.

இவற்றை மாதரசி பொறுமையாகக் கேட்டாள். அவளுக்குக் கோபம், துக்கம், சிரிப்பு எல்லாம் சேர்ந்து வந்தன. "பேஷ்; மந்திரி மகனே! நிரம்பவும் நன்றாக இருக்கின்றது. பணங் கொடுத்துப் பிறனைப் பத்திரம் எழுதுவிப்பது போல் கூலி தந்து தாலி கட்ட வைத்தீர்களோ? அருமையான வேலை. அபாரமான மூளை; ஒருவன் தாலி கட்டுவது; ஒருவன் மனைவியாக அடைவதுவோ? உலகில் இதுவரை இப்படி ஒரு நிகழ்ச்சி எங்கும் நிகழ்ந்திராது. மகா மோசம்; படுமோசம்; மதியீனத்தில் மிதக்கும் மடையர்களுக்கெல்லாம் உன் தந்தை தான் தலைவன். அவன் மகனாகிய நீ மடையர்கள் சங்கத்திற்குச் செயலாளன். வியக்கத் தகுந்த அருஞ் செயல். உனக்கு ஒருநாள் விட்டு ஒருநாள் காகாவலியா? கேட்க எனக்கு நிரந்தரத் தலைவலி வரும்போல் இருக்கின்றது. சரி, சரி, நேரம் ஆகிவிட்டது. அறிவு நிறைந்த அசட்டுப் பிண்டமே! அருமை மேவு எருமைக் கன்றே! உனது மேன்மை தங்கிய செயலைச் சில காலத்திற்கு வெளியிட மாட்டேன். நீ உன் வீட்டிற்குப் போயிரு. மறு உத்தரவு வருகின்ற வரை வீட்டிற்குள் இரு. எழுந்து சீக்கிரம் போ'' என்றாள்.

பிரதாபசீலன் எழுந்து, "நீங்கள் கோபிக்கக் கூடாது; உங்கள் திருவாக்கினால் சொன்னதெல்லாம் எனக்குச் சந்தோஷமே. விடிந்தபின் போவேன். புல்லென்றாலும் புருடன்; கல்லென்றாலும் கணவன். நீங்கள் கணவனாகிய என்னை வெறுக்கக் கூடாது. நான் உங்களை உண்மையாகவே நேசிக்கின்றேன். என்னைக் கைவிட வேண்டாம்'' என்று கெஞ்சியும் கொஞ்சியும் பேசி அவள் அருகிற் சென்றான். மாதரசி ரணபத்ரகாளி போல் சீறினாள். "சீ! மதி கெட்ட மடையனே! நீ என் கணவனா? உன் நாவை அறுத்து நாய்க்குப் போடுவேன். தாலி கட்டியவர்

அல்லவா கணவர்? பேதையாகிய நீ பெண்ணறத்தை எப்படி அறிவாய்? என் இடையில் உடைவாள் இருக்கின்றது. அருகில் வராதே. மூடசிகாமணியே! மூளையில்லாத மூதேவியே! நீயே போகின்றாயா? அல்லது எனது பணியாளர்கள் வந்து உன் கழுத்தில் கையை வைத்துத் தள்ளப்பட்டுச் சாகின்றாயா? என் புனிதமான கணவருக்குப் பதினாயிரம் பொன் கொடுத்தனுப்பி னேன் என்ற ஒரு மொழிக்காக உனக்கு உயிர்ப் பிச்சை தந்தேன்; என் எதிரே நிற்காதே; ஓடிப்போ'' என்றாள்.

பிரதாபசீலன் பிரதாபங் கேட்டு பரிதாபமுடன் கதவைத் திறந்துகொண்டு வீட்டை நாடி ஓடினான். மாதரசிக்கு மனம் வேதனையைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. தீயின்மேல் கிடந்து துடிக்கும் புழுவாய்த் துடித்தாள். ஒரு கணம் ஒரு யுகம் போல் இருந்தது.

பொழுது விடிந்தது. தந்தையை நோக்கி, ''அப்பா! நான் தவஞ் செய்யப் போகின்றேன். அதற்குரிய சாதனங்களை ஆயத்தம் செய்து கொடும்'' என்றாள். தன் கணவனுக்கு வந்த காகாவலி தீரும் பொருட்டு தவஞ் செய்கின்றாள்போலும் என்று வீரசேகர மன்னன் கருதினான். தவக்கூடம் புதுக்கித் தந்தான். தவத்திற்குரிய சாதனங்களை ஆயத்தம் புரிந்து தந்தான். தவச் சாலையில் இருந்து மாதரசி அம்பிகையை நோக்கித் தவம்புரிவாள் ஆயினாள்.

மகரசேனன் மகனை நோக்கி, ''மகனே! என்ன நடந்தது?'' என்று கேட்டான். ''அப்பா! நல்ல வில்லங்கத்தில் என்னை மாட்டிவிட்டீர். நான் பிழைத்ததே பெரும் புண்ணியம். அரச குமாரியை நினைத்தாலே எனக்குக் காகாவலி வரும்போல் இருக் கின்றது. அவள் உள்ளதை உள்ளவாறு கூறு என்றாள். நான் நடந்ததை நவின்றேன். அப்பா! மடையர்கள் சங்கத்திற்கு நீர் அரசராம் நான்தான் அமைச்சனும், அப்பா! ஒரு கணம் அங்கு நின்றிருப்பேனாயின் என் தலை பனம் பழம் போல் உருண் டிருக்குர். ஓடி வந்துவிட்டேன். அப்பா! உனக்கு எப்படியப்பா இந்த யோசனை தோன்றியது. இதனை மன்னர் அறிந்தால் என்ன ஆகுமோ?'' என்று கூறி தலைமீது கை வைத்து அமர்ந் தான் பிரதாபசீலன். மந்திரியும் மதிகலங்கி நின்றான்.

திருமணம் இவ்வாறு நிலைகுலைந்தது மன்னனுக்கு மட்டற்ற கவலை. ''தன் அருமந்த ஒரு மகளுடைய கதி இப்படியாயிற்றே'' என்று எண்ணி ஏங்கினான். பெருந்துயரமுற்றான்.

கணவனுக்கு வருங் காகாவலி தீர மாதரசி தவம் புரிகின்றாள் என்று எங்கும் வதந்தி.

மாதரசி காசிவரை இடையிடையே சவுக்கைகள் அமைக்கச் செய்தாள். அந்தச் சவுக்கைகள் தோறும் நல்ல திறமையான



ஆட்களை இருத்தினாள். அவ்வழி செல்பவரை உபசரித்து மூன்று வினாக்கள் அடங்கிய ஏட்டைத் தந்து, உரிய விடை கூறு வோரைப் பல்லக்கில் ஏற்றி அழைத்து வருமாறும் பணித் திருந்தாள்.

1. மேலான இன்பம் எது?
2. ஓம் என்பதின் உட்பொருள் யாது?
3. கைதீண்டியும் மெய் தீண்டாத வீரஉள்ளம் எதனால் வரும்?

இந்த ஏற்பாட்டின்படி வருவாரையும் போவாரையும் ஆங்காங்கு உபசரித்து இந்த ஏட்டை நீட்டுவார்கள். இதற்கு யாரால் விடை கூறமுடியும்! அவர்கள் ஆந்தைபோல விழிப் பார்கள்.

ஓராண்டு உருண்டுவிட்டது. சதானந்தன் இசைபாடும் இசைவாணனுக்குச் சுருதியில் நினைவு மாறாமல் இருப்பதுபோல தனது முடிவுநாளையும் ஒருபுறம் மறவாமல் நினைத்துக்கொண் டிருந்தான். அந்நாள் வந்தது. ''இன்று நமக்கு இறுதி என்பது உறுதி; மரணம் எய்தி மயிற்பெருமான் சரணம் அடைய வேண்டும். ஆனால் ஊருக்குள் அது நிகழக் கூடாது'' என்று எண்ணினான்.

கங்கையில் முழுகினான். தாய் தந்தையர்க்கு நீரால் தர்ப்பணம் புரிந்தான். விச்வநாதரை வணங்கினான். விடை பெற்றான். காசிமாநகரைக் கடந்து ஒரு சிறு கானகத்தை யடைந் தான். ஒரு குராமரத்தின் அடியில் அமர்ந்து கண்களை மூடினான். இதயம் துடித்தது. ''முருகா'', ''முருகா'' ''முருகா'' என்று மூன்றுமுறை கூவி நிலத்தின்மீது சாய்ந்தான். உயிர் பிரிந்தது.

(தொடரும்.)

---

## ஆதிவயலூர் வெண்பா அந்தாதி

(உ௬0ம் பக்கத் தொடர்ச்சி)

உவந்து நினதடியே உண்ணயந்து போற்றுந்
தவந்தனையே கொண்டேன் தமியேன்—அவந்துடைத்தே
ஆதிவய லூரா! அயில்பிடித்த செங்கரனே! 4.
நீதியோடு காக்க நினை.

நினையன்றி யாரை நினைப்பே னடியேன்?
புனையன்றில் போல்வள்ளி போகந்—தனைவிரும்பி
ஆண்ட வயலூரா! ஆறுமுகா! நின்கழலே 5.
வேண்ட வருவேன் விழைந்து.

உ
முருகா

# ஒன்று தெரிந்தால் ஒன்று தெரியாது....

உலகத்தைக் காண்கின்றபோது உலகைப் படைத்த ஒரு பரம்பொருள் உண்டேன மதிப்பதுவே அறிவுடைமை. குடத் தைக் கண்டவுடன் குடத்தை வனைந்தான் ஒருவன் இருக்க வேண்டும் என்று நினைக்கின்றோம் அல்லவா? உலகம் காரியப் பாடுடையது. காரியம் கர்த்தா இன்றி நிகழாது. ஆகவே உல கிற்கு ஒரு கர்த்தன் வேண்டும். அவன் உலகைத் தோற்று வித்தான். நிலைபேறச் செய்கின்றான். ஒடுக்குகின்றான்.

ஆனால் அக்கடவுள் கண்களுக்குத் தெரியவில்லையே என்று ஐயுறுவார் பலர். கட்புலனுக்குத் தோன்றாமையால் ஒரு பொருள் இல்லையேன்று கூறுவது மடமை. மலரில் உள்ள மணம் கட்புலனுக்குத் தோன்றுகின்றதா? நெருப்பில் உள்ள சூடு கட்புலனுக்குத் தோன்றுகின்றதா? கடல் நீரில் உள்ள உப்பு கட்புலனுக்குத் தோன்றுகின்றதா? சிந்தியுங்கள்.

''உட்லுமுடல் உயிருநிலை பெறுதல் பொருளென உலகம்
ஒருவிவரு மநுபவன சிவயோக சாதனையில்
ஒழுகுமவர் பிறிது பரவசமழிய விழிசெருகி
உணர்வு விழிகொடு நியதி தமதூடு நாடுவதும்''

என்கின்றார் அருணகிரிநாத சுவாமிகள்.

உணர்வு விழியினால் உணரப்படுகின்ற பொருள் பரம் பொருள் எனவுணர்க. அந்தவுணர்வு உலக நிலையினின்றும் நீங்கி, உலகை மறந்து உள்ளத்தையும் மறந்து உணர்வையும் மறந்து உயிரையும் மறந்தபோது அரும்புகின்ற ஒன்று ஆகும். நூலறிவினால் வாலறிவனைக் காண இயலாது.

''உருவெனவும் அருவெனவும் உளதெனவும் இலதெனவும்
உழலுவன பரசமய கலையாரவாரமற
உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை உணருமவர் அநுபூதி யானதுவும்''

என்று உணர்த்துகின்றார் அருணகிரிநாதர்.

கடவுள் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் அரு ளோடு நீக்கமற நிறைந்திருக்கின்றார். ஆனால் காணமுடிய வில்லை. பாலில் நெய்யிருக்கின்றது. தெரியவில்லை. கண்ணுக் குத் தெரியாமையால் பாலில் நெய்யில்லை யென்றால் நம்மை அறிவுள்ள உலகம் பழிக்குமன்றோ?

* * * ''பாலில்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்''



உறவு கோல் நட்டு உணர்வுக் கயிற்றினால் முறுகவாங்கிக் கடைய அவன் முன்னிற்பன்.

உலகிலே இறைவன் எங்கும் நிறைந்திருப்பானாயின் உலக மாயை அவனைப் பற்றாதோ? பற்றாது. எதுபோல்? கடலில் பிறந்து கடல் நீரைக் குடித்து கடலிலேயே வாழ்கின்ற கடல் மீனில் உப்பு ஏறுவதில்லை. அதுபோல உலகமேங்கும் நிறைந் திருக்கும் இறைவனை உலகமாயை பற்றுவதில்லை. பாம்பன் சுவாமிகள் இப்படி விளக்கியருளினார்.

உலகக்காட்சி தெரிகின்ற வரை கடவுட் காட்சி தெரியாது. கடவுட்காட்சி தெரியத் தலைப்பட்டார்க்கு உலகக் காட்சி தெரியாது.

''நாயைக் கண்டால் கல்லைக் காணோம் கல்லைக் கண்டால் நாயைக் காணோம்'' என்பது நம்நாட்டுப் பழமொழி. நாயை அடிக்கக் கல் தேடுவது என்ற பொருளில் இப் பழமொழி எழ வில்லை.

ஒரு சிற்பி ஒரு வீட்டின் முகப்பில் கருங்கல்லில் நாய் செய்து வைத்தான். புதிதாக வந்த ஒருவர், தொடக்கத்தில் நாய் என்று கண்டு மயங்கி நின்றார். அறிவு தெளிந்தபின் அது நாயன்று; கல் என்று கண்டார். நாய் என்று கண்டபோது கல் தெரியவில்லை; கல் என்று கண்டபோது நாய் தெரியவில்லை. நாயும் அதுதான், கல்லும் அதுதான். அதுபோல் உலகம் என்று கண்டால் கடவுள் தெரிவதில்லை. கடவுள் என்று கண்டால் உலகம் தெரிவதில்லை.

மரத்தினால் யானை செய்து வைத்திருக்கின்றது. கோயிலுக்கு வந்த ஒருவர் அதனைப் பார்க்கின்றார். யானையேன்று பார்க் கின்றார். மரம் தோன்றுவதில்லை. மரம் என்று பார்க்கின்றார். அப்போது யானை தோன்றுவதில்லை. அதுபோல் பரம் என்று பார்த்தால் பார் தெரிவதில்லை. பார் என்று பார்த்தால் பரம் தெரிவதில்லை.

''மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்''

என்பது திருமந்திரம்.

முன்னாளில் யாழ்ப்பாணத்திற்குக் கப்பலில் போவார்கள். அப்போது இந்தியக் கரை தெரிகின்ற வரை யாழ்ப்பாணக் கரை தெரியாது. யாழ்ப்பாணக் கரை தெரிந்த அந்தக் கணத்தில் இந்தியக் கரை தெரியாது. இருகரைகளும் தெரிகின்ற அள வில் ஒரு நடு இடங் கிடையாது. இனி இருகரைகளும் தெரியாத அளவிலும் ஒரு நடு இடங் கிடையாது. ஒரு கரை தெரிந்தால்

மறு கரை தெரியாது. அதுபோல் பொருட்காட்சி தெரிகின்ற வரை அருட்காட்சி தெரியாது. அருட்காட்சி தெரிந்த போது பொருட்காட்சி தெரியாது.

"சும்மா விரு சொல்லற என்றலுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே"

என்கின்ற இந்த அநுபவத்தை அருணகிரிநாதர் பெற்றார். இந்த அநுபவத்தை எனக்குக் காட்டு என்று வேண்டுகின்றார் சிதம்பர சுவாமிகள்.

"சும்மா விருஎனநீ சொல்லப் பொருளொன்றும்
அம்மா அறிந்திலமென் றன்றுரைத்த—எம்மான்
அருணகிரி நாதன் அநுபவம் நாயேற்குக்
கருணைபொழி போருரா காட்டு.

'எல்லாமற என்னை யிழந்தநலம் சொல்லாய்'

என்கிற அநுபூதி யநுபவத் திருவாக்கை யுன்னுக.

* * * "எல்லாம் ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு
என்னைமறந் திருந்தேன் இறந்தே விட்டது இவ்வுடம்பே"

என்னும் கந்தரலங்காரக் கனியமுதப் பாடலாலும் அறிக. ஆ! ஆ!! எத்தனைப் பெரிய அனுபவம்.

குறியைக் குறியாது குறித்து அறியும் நெறியில் விளைவது அந்த அநுபவம். அந்த அநுபவம் ஏற்பட்டபோது சேறி வற்று உலகோடு உரை சிந்தையும் அற்று அறிவு அற்று அறியாமையும் அற்று விடும்.

வெளியில் விளைந்த வெறும் பாழைப் பெற்ற வெறுந் தனியாக விளங்கும் நிலை அது.

அங்கே காண்பானுமில்லை; காட்சியுமில்லை; காட்சிப் பொருளுமில்லை. ஞாதுரு ஞான ஞேயங்களாகிய முப்பாழுங் கடந்த முழுநிலை அது. முப்பாழுங் கடந்து அப்பாலே சென்ற அநுபவஞானிகள் இப்பார்வையின்றி வேறு எப்பார்வையுமின்றி நற்பார்வையாகிய அருட்பார்வையிலேயே நிலைத்து நிற்பர். அவர்கட்குக் காலமில்லை; கர்மமில்லை; பாவமில்லை; புண்ணியமில்லை. சுகமில்லை, துக்கமில்லை. தானில்லை, பிறரில்லை. அங்கே ஒன்றுமேயில்லை. எங்கும் ஒரே அருள். மருள் இல்லை. இருள் இல்லை. சுத்த வெளி. நித்த ஒளி. அந்த ஒளிமயமாய் நின்று அறிவுக் குன்றின் மேல் நிற்பர். அங்கே கீழ்மேலில்லை. மலை மீது ஏறிப் பார்ப்பார்க்கு உயர்வு தாழ்வு தெரியாது அல்லவா?

ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத்து உச்சியின்மேல் அளியில் விளைந்ததோர் ஆனந்தத்தேனைப் பருகி உருகி இன்பம்



பெருகி ஏகாந்தமாக நிற்பர். அங்கே மோகாந்தகாரமில்லை. தேகாந்தந் தீர்வர். வாக்கும் மனமும் கடந்த நிலையில் போக்கும் வரவும் புணர்ப்பும் இல்லாத பெருநிலை அந்த நிலை எனவுணர்க. அத்திரு நிலையில் விளையும் ஆனந்தத்தை ஆராலும் உரைக்க ஒண்ணாது.

" போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும் இல்லாதொன்று வந்துவந்து
தாக்கும் மனோலயந்தானே தரும் எனைத் தன்வசத்தே
ஆக்கும் அறுமுகவா சொல்லொணாதிந்த ஆனந்தமே "

என்ற அற்புதச் செந்தமிழ்த் திருவாக்காலும் உணர்க.

ஆகவே அந்த அருட் காட்சியைக் காண விழைவார் சிறிது சிறிதாக உலகக் காட்சியை மறப்பதற்கு முயலுதல் வேண்டும். இது மறைந்த போது அருட்காட்சி நிறையும். அது தியானாதி முயற்சியினால் கைகூடும். பாடுபடாத மாக்கள் அதனை எங்ஙனம் பெறுவர்? " நான்பட்ட பாடு பஞ்சுதான் படுமோ? " என்பார் இராமலிங்கர்.

அருளால் கண்டால் அனைத்தும் ஒன்றாகத் தெரியும். அறிவால் கண்டால் காண்கின்ற தன்னையுந் தெரியாது.

"அருளால் எவையும் பார் என்றான்—அத்தை
அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருள்கண்ட தல்லால்—கண்ட
என்னையுங் கண்டிலன் என்னேடி தோழி"

என்கிறார் தாயுமானார்.

எனவே உலகையும் தன்னையும் மறந்து, உணர்வு நிலை நின்று அவனருளே கண்ணாகக்கொண்டு கண்டு அயரா இன்ப நிலையில் அருளாரமுதம் உண்டு பக்குவ ஆன்மாக்கள் பரிபூரணம் பெறுக.

---

## ஆதிவயலூர் வெண்பா அந்தாதி

விழைந்துபவ மேபுரியும் வீணனென வென்னைத்
தழைந்து வருபிறப்பிற் றள்ளேல்—குழைந்துநினைப்
பாடு மடியேற்குப் பாரவய லூர்முருகா! 6.
நாடுமகிழ் ஈவாய் நயந்து.

நயந்துவய லூர்மேவும் நாயகனே! கந்தா !
பயந்துநம னுக்காப் படிமேல்—சயந்தருநின்
வேலுமயி லுந்துதித்தேன் வேண்டு மெனக்கருளிக் 7.
கோலு சுகமனைத்துங் கூட்டு.

உ

முருகா

# திருவிளையாடற் புராணம்

(சிவக்கிழார்: திருநாவுக்கரசு)

(உச0-ம் பக்கத் தொடர்ச்சி)

## 2. வெள்ளையானை சாபந் தீர்த்த படலம்.

(இவ் வரலாற்றின் உட்கருத்து)

[அகங்காரம் கொண்டார் துன்புறுவார் என்பதும், மூவாசை வென்ற முனிவர்கள் வெகுளியை யாரும் தடுத்தற்கியலாது என்பதும், இறைவனை எல்லோரிலும் மேலான பெருமையுடையான் என்பதும்; பெரியோர்கள் வெகுண்டாலும் குற்றமுணர்ந்த அக்கணமே மன்னிக்கும் இயல்புடையார் என்பதும்; சிற்றுயிர்க்கும் பேரருள் செய்யும் கருணையாளன் என்பதும், இவ்வரலாற்றுக்கண் பொதிந்துள்ள செம்பொருள்களாகும்.]

ஒரு காலத்தில், மூவாசைகளையும் பற்றறக் களைந்த முனிவரேறு 'துருவாசர்' என்பார் கருவாசனை கழிக்கும் காசித் தலத்தில் தன் பெயரால் ஒரு சிவலிங்கம் நிறுவிப் பெருமானை மூர்த்தி வடிவில் ஆகம முறைப்படி வழிபட்டார். வழிபாட்டின் முடிவில், அன்புக் கெளிய சிவபெருமான் திருமுடியிலிருந்து தாமரைப் பூவொன்று வீழ்ந்தது. அதனை முனிவர் தம் கையினுல் தாங்கினுர். தன் கண், தலை, மார்பு முதலியவற்றில் அணைத்து மகிழ்ந்தார். பின் அம் மலரோடு தேவர்கள் வாழும் கற்பக நாடு சென்ருர்.

அவ்வமயம், தேவேந்திரன் வெள்ளை யானை மீது ஏறித் தேவர்கள் வாழ்த்தெடுப்பப் பவனி வருகின்ருன். சங்குகள் முழங்கின. பல வாத்தியங்களும் ஒலித்தன. கடல் போல் தேவர்கள் சேனை ஆர்த்தன. மறைகள் முழங்கின. தேவர்கள் பல்லாண்டுகள் கூறி வாழ்த்தினர்.

அழகின் மிக்க அரம்பையர் ஆடினர். கீதம் ஒலித்தது. வெண்கவரிகள் வீச, வெண்கொற்றக் குடை நிழல் கொடுப்ப அழகமைந்த கடலில் கொடி விரித்துச் செல்லும் கப்பல் மீது நின்று அதனைச் செலுத்தும் கப்பற்றலைவன் போல வெள்ளை யானை மீது பவனி வந்தான்.

அவனைக் கண்ட தேவர்கள் தம் சக்திக்கேற்ப காணிக்கை கொடுத்து வணங்கினர். பரிசுகள் கொடுத்துப் பல்லாண்டு கூறினர். துருவாசமுனிவரும் தம் கையிலிருந்த சிவபெருமான் திருமுடிப் பிரசாதமாகிய தாமரைமலரைக் கொடுத்து வாழ்த்தினுர். தீங்கில்லா ஆசிசொல்லிக் கொடுத்த தாமரை மலரை இந்திரன் தமது செல்வச் செருக்காலும், பவனிக்கண் கண்ட களிப்பின் தருக்காலும், ஒரு கையை நீட்டிவாங்கித் தான் ஏறி வந்த மதயானையின் உச்சியில் மதியில்லாது வைத்தான்.



அம் மதயானை சிறப்புமிக்க அம்மலரை அதன் பெருமையறியாது எடுத்துத் தன்காலின் கீழ் இடறிச் சிந்தியது. கண்டனர் முனிவர். கண்ணுதல் எனக் கண் சிவந்து வெகுண்டார். ஆலம் உண்டபிரான் என உருத்து நின்று கூறினுர். ஏ பேதாய்,

"புள்ளிய தோலாடை புனைந்தரவப் பூண்அணிந்த
வெள்ளிய செங்கண் விடையா னடிக்கமலம்
உள்ளிய மெய்யன் புடையார் அருவருத்துத்
தள்ளிய செல்வத் தருக்கினுய் என்செய்தாய்?"

தோலாடை அணிந்து அரவம் பூண்டு வெள் விடையேறும் பெருமான் அடியில் மெய்யன்பு பூண்டு ஒழுகும் அடியார் அருவருத்து 'வேறுக்கை' என்று வெறுத்துத் தள்ளிய குப்பையாகிய செல்வத்தைப் பொருள் என்று மதித்த நீ என்ன செய்தாய். அமரர் கையுறையை மதித்து வாங்கிய நீ! எம் ஈசன் முடி மீது சாத்திய மலரைப் போற்ருது யானை மிதித்துச் சிந்துமாறு அதன் மீது வைத்தாய்.

"வண்டுளருந் தண்துழாய் மாயோன் இறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தேள் இறுமாப்பும்
அண்டர் தொழ வாழ் உன்இறுமாப்பும் ஆலாலம்
உண்டவனைப் பூசித்த பேறென்று உணர்ந்திலையால்"

மாயவன் களிப்பும் பிரம்மாவின் களிப்பும் உன் களிப்பும் சிவபெருமானைப் பூசித்த பேறல்லவா? உணர்வில்லாதவனே! பெரிய யானையை யுடையவனே! நின் தலை பாண்டியர் மரபில் வரும் ஒரு வீரனின் வளை என்னும் ஆயுதத்தால் சிதறுக; நின் யானையானது காட்டானையாக; எனக் கடுஞ்சாபம் இட்டார்.

முனிவர்பிரான் சாபம் கேட்ட இந்திரன் இடியோசை கேட்ட நாகம்போல் நடுங்கினுன். கரங்களைக் குவித்தான். முனிவரை நோக்கி "ஐம்பொறி யவித்த ஐய! யானும், என் யானையும் தீங்குடையோம். தவறிழைத்தோம். பெரும! பிழை பொறுத்தருள வேண்டும். இச் சாபம் நீங்கு மார்க்கம் அருள வேண்டுகின்றேன்" என்று வருந்திக் குறையிரந்தான்.

போன் சுட்டாறியது போன்று சினம் விடுத்த முனிவர், "ஏ! இந்திரா! சிந்தனைக்கும், வாக்கிற்கும் எட்டாத சிவபெருமான் பிரசாதத்தினை அவமதித்த பாவம் நீங்காது. ஆயினும், நின் தலை சிதறுக! என்று கூறியது, நின் முடியோடு நிற்கவும், நின் யானையின் சாபம் காட்டானையாக நூருண்டு வாழ்ந்து பின்னர் நீங்கவும் இறைவனருளை யெண்ணிச் சாப நிவிர்த்தி செய்கின்றேன். இனியாவது செருக்கினைத் தவிர்த்து வாழுதி!" என்று கூறி யகன்ருர்.

பின் வெள்ளை யானையாகிய 'ஐராவதம்' காட்டானையாகி மண்ணுலகு போந்து நூருண்டுகள் காடு, மேடு என்று அலைந்து பல காட்டானைகளோடு திரிந்து நல்லூழ் கூட்டக் கடம்பவனத்து அடைந்தது. முனிவரருள் வந்து எய்த திருவாலவாய்க் கடம்ப

வனத்துள்ள போற்றுமரைத் தடாகத்தைக் கண்டதும் அதன் கண் வீழ்ந்து ஆடியது. உடனேயே காட்டானையாயிருந்த 'ஐராவதம்' தன் பழைய வெண்மை வடிவம் பெற்றுத் தேவ யானையானது.

மீண்டும் பண்டைய அறிவு தலையெடுத்தது. பரஞ்சுடர் அருள் பாலிக்கச் சிவலிங்கத் திருவுருவை எதிரே கண்டு அர்ச்சிக்க விரும்பி போற்றுமரைக் குளத்தின் நன்னீரை நீண்ட கையால் முகந்து சிவலிங்கத் திருவுருவின் முடிமீது விட்டு குளத்து மலர்ந்திருந்த தாமரை மலர்களைக் கொய்து முடிமீது சாத்திக் கண்ணீர் ததும்ப உள்ளங் குழைந்து வழிபாடு செய்தது.

யானையின் மெய்யன்பு கண்ட பரஞ்சுடர் யானையே நீ வந்ததேன்? உனக்கு வேண்டும் வரம் யாது? என்று கருணையோடு வினவினார். ஐராவதமும், ஐயனே! நின் பொன் விமானத்தை எட்டு யானைகள் தாங்குகின்றன, அடியேன் அவற்றோடு ஒன்பதாவதாகத் தாங்கிப் பேறெய்த விரும்புகிறேன் என்று பிரார்த்தித்து வணங்கியது. அன்பால் நிறைந்த 'ஐராவதம்' இங்ஙனம் கூற, இறைவன் 'ஐராவதமே! விண்ணாடுடைய இந்திரன் எம் அடியான்; அவனை நீ சுமப்பதே எமக்கு விருப்பம். நீ மீண்டும் விண்ணாடெய்திப் பழையபடி இந்திரனோடு வாழ்க' என அருளினான்.

வெள்ளையானையும், இறைவனை வணங்கி மேற்றிசையடைந்து தன் பெயரால் ஒரு குளம் தோண்டி அதன்பால் சிவவுருவையும், கணேச உருவையும் ஸ்தாபித்து வணங்கி வாழ்ந்தது. பின்னர் கற்பக நாடாள்வான் தன் யானையின் நிலையுணர்ந்து அதனைத் தன்பால் சேர்க்குமாறு தூதரை விடுத்தான்.

தூதர்கள் வந்து யானையை அழைப்ப யானை நான் வருகிறேன் நீங்கள் செல்லுங்கள் என அவர்களை அனுப்பிவிட்டுக் கீழ்த்திசையில் ஓர் ஊர் தன் பெயரால் நிறுவி, இந்திரேச்சுரன் என ஓர் இறையுரு நிறுவி, சிவபெருமானைப் பூசித்து அங்கிருப்ப இந்திரன் களிறு வந்திலதே என்று எண்ணி மனோவேகமுடைய தூதரையனுப்பி அழைத்தான்.

வெள்ளையானையும் வானுலகடைந்து தனக்கு நேர்ந்த துன்பத்தையும், இன்பத்தையும் இந்திரன்பாற் கூறி முன்போல் வாழ்ந்தது.

மேற்கே, ஐராவதப் பெருந் தீர்த்தத்திலாடிக் கணேசப் பெருமானைத் தொழுது கிழக்கே ஐராவதேச்சுரத்துக் கடவுளைப் பணிபவர் சாபத்தொடர்பும், பாவத்தொடர்பும் கழிய வாழ்வர்.

"இம்மையில் அறமுன் மூன்றால் எய்திய பயனை எய்தி
அம்மையில் மகவான் ஈரேழ் அரும்பதம் அளவும் வானில்
வெம்மை இல்போகம் மூழ்கி வெறுப்பு வந்து அடையவுள்ளச்
செம்மையில் விளைபேரின்பச் சிவகதிச் செல்வ ராவார்"

(தொடரும்)

உ
ஓம் குஹாய நம:



# திருப்புகழமிர்தம்

" குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம் "

மலர் 21 | துன்முகி ஆண்டு பங்குனித் திங்கள் மார்ச்சு-1957 | இதழ் 12

## திருப்புகழ்

திருச்செந்தூர்

இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே
உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி
உனையெனது ளறியு மன்பைத் தருவாயே
மயில்தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்
வனசகுற மகளை வந்தித் தணைவோனே
கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே.

### பதவுரை

மயில்=மயிலும், தகர்=ஆடும் நிறைந்த, கல் இடையர் அந்த தினைகாவல்=மலையினிடம் வாழ்கின்ற வேடர்கள் அமைத்த அந்த தினைப்புனத்தைக் காவல் புரிந்த, வனச குறமகளை=இலக்குமி போன்ற வள்ளியம்மையாரை, வந்தித்து அணைவோனே=வணங்கி மணஞ் செய்து கொண்டவரே! கயிலை மலை அனைய=திருக்கயிலாயம் போன்ற, செந்தில் பதி வாழ்வே=திருச்செந்தூரில் எழுந்தருளி வாழ்பவரே! கரி முகவன் இளைய=யானைமுகக் கடவுளாகிய விநாயகப் பெருமானுக்கு இளையவரே! கந்த=கந்தக் கடவுளே! பெருமாளே=பெருமையின் மிகுந்தவரே! இயல் இசையில் உசித வஞ்சிக்கு அயர்வு ஆகி=இயல் தமிழுடன் கூடி இசை ஞானத்தில் தகுதி பெற்ற பெண்ணை நினைந்து

உள்ளம் வாடி, இரவு பகல் மனது சிந்தித்து உழலாதே=இரவும் பகலும் என் மனமானது அப் பெண்ணையே நினைந்து அலையாமல், உயர் கருணை புரியும்=தேவரீருடைய உயர்ந்த திருக் கருணையால் விளையும், இன்ப கடல் மூழ்கி = பேரின்பக் கடலில் முழுகி, உனை எனது உள் அறியும்=தேவரீரை அடியேனுடைய உள்ளத்தில் அறிகின்ற, அன்பை தருவாயே=அன்பினைத் தந்து அருள் புரிவீர்.

## பொழிப்புரை

மயில்களும் ஆடுகளும் நிறைந்து வாழ்கின்ற மலையினிடம் வசிக்கின்ற வேடர்களுடைய தினைப்புனத்தைக் காவல் புரிந்த திருமகள் போன்ற அழகு மிகுந்த வள்ளியம்மையாரை விளையாட்டாக வணங்குவார் போல் வணங்கி மணந்து அருள் புரிந்தவரே! திருக்கயிலாயம்போல் மகிமையில் சிறந்த திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ளவரே! ஆனைமுகப் பெருமானுக்குத் தம்பியே! கந்த வேளே! பெருமிதம் உடையவரே! இயல் தமிழுடன் கூடி இசைப் பாடல்களில் வல்ல கொடி போன்ற இளம் பெண்ணை விரும்பி தளர்ச்சியுற்று, இரவு பகலாக அப் பெண்மணியையே நினைந்து அலையாமல், தேவரீருடைய உயர்ந்த திருக் கருணையினால் விளையும் பேரின்ப சாகரத்தில் முழுகி, தேவரீரை எனது உள்ளமாகிய கோயிலிலே உணர்ந்து உய்யும் அன்பை அருள்புரிவீர்.

## விரிவுரை

**இயலிசையி லுசிதவஞ்சி:—**

போது மகளிர் இனிய இசைப்பாடலை மிகவும் நன்றாகக் கற்றுக் கொள்வர். அந்த இசை ஆடவரை மயக்கி இசைவிக்கும். இசை பசுவையும் பாம்பையும் மயக்குமெனின் ஆடவரை மயக்குவதில் என்ன வியப்பு?

"புலன்களை வென்று துறவு பூண்டவர்கள் பெண்களை வியந்து கூறக் கூடாது. பேரையும் தம் நாவினால் சொல்லவொண்ணாது; கண்ணும் கருத்தும் ஒன்றிப் பெண்களை நோக்கக் கூடாது. பண்ணமைந்த பாடல் கேட்கக் கூடாது" என்று அறநூல் கூறுகின்றது.

பெண்மை வியவார் பெயரும் எடுத்தோதார்
கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்கார்—பண்ணொடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி னார்.

**வஞ்சிக் கயர்வாகி:—**

வஞ்சி—கொடி. கொடி போன்ற மென்மைத் தன்மையுடைய அம் மாதரை விரும்பி உள்ளம் வருந்துவர்.



**இரவு பகல் மனது சிந்தித் துழலாதே:—**

அம் மாதரை இராப் பகலாக நினைந்து நினைந்து நெஞ்சு புண்ணாகி, அம் மாதரை யடையும் பொருட்டு இங்குமங்குமாக உழலுவர். இனி ஆசைக் கடலுள் முழுகி அதனால் பலப்பல பிறப்பு எடுத்தும் உழலுவர். சுவர்க்கத்திற்கும் நரகிற்குமாகவும் உழலுவர்.

**உயர் கருணை புரியும் இன்பக்கடல் மூழ்கி:—**

முருகப் பெருமானுடைய கருணை மிகவும் உயர்ந்தது. அதனால் விளைவது பேரின்பம். அது கடல் போல் பெருகியுள்ளது. ஆதலின் அதில் பிறவிக் கோடையாலாய வெப்பந் தீரும் பொருட்டு முழுகு என்றார்.

ஆசை வெள்ளத்தில் முழுகியலைந்த ஆன்மா ஆண்டவனுடைய கருணையால் எய்தும் பேரின்ப வெள்ளத்தில் முழுகி மகிழும்.

**உனை யெனது ளறியு மன்பைத் தருவாயே:—**

முருகப் பெருமான் ஆன்மாக்களின் இதய தாமரையில் உறைகின்றனன். அப்பரமனை உள்நாடி யறிய வேண்டும்.

எண்ணாயிரத் தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணா ரமுதனைக் கண்டறி வாரில்லை
உண்ணாடி யுள்ளே ஒளிபெற நோக்கில்
கண்ணாடி போலே கலந்திருந் தானே.

என்கின்றார் திருமூலர்.

உடலுமுடல் உயிருநிலை பெறுதல் பொருளென உலக
மொருவிவரு மநுபவன சிவயோக சாதனையில்
ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசெருகி
உணர்வுவிழி கொடுநியதி தமதூடு நாடுவதும்
—திருவகுப்பு.

தேடிக் கண்டு கொண்டேன்—திருமாலொடு நான்முகனும்
தேடித் தேடொண்ணாத் தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டு கொண்டேன்.
—அப்பர்.

முருகனிடத்தில் அருணகிரியார் கேட்கின்ற வரம் அன்பு ஒன்றே என்பதை உய்த்துணர்மின்கள். வீரவாகு தேவர் முருகவேளிடம் வேண்டிய வரமும் இதுவேயாகும்.

கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலை யிந்திரன் அரசினைக் கனவினும் வெஃகேன்
மால யன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே வேண்டுவன் தமியேன்.

உ
முருகா

## கற்பு

### மாதரசி.

உணவையும் உறக்கத்தையும் துறந்து, உலகையும் தன்னையும் மறந்து அரிய பெரிய தவம் புரிந்தாள் மாதரசி. பன்னிருகைப் பரமனைப் பெற்ற பார்வதிதேவியைக் குறித்து பன்னிருமாதங்கள் தவஞ் செய்தாள். ஓவிய விளக்குபோல் அசைவற்றிருந்தாள். அவளுடைய தவத்தைக் கண்டு மண்ணவரும் விண்ணவரும் அதிசயித்தார்கள். தாய் தந்தையர் அவள் அசையாமல் சித்திரப் பதுமைபோல் இருந்து செய்யும் தவநிலையை நோக்கி கைகூப்பி வணங்கினார்கள்.

அன்று பவுர்ணமி; அதிகாலை அம்பிகைதோன்றி காட்சியளித்தாள். மூவருந் தேவரும் பணியும் பராசக்தியை மாதரசி கண்டாள். எழுந்தாள், இணையடி மீது விழுந்தாள். அழுதாள். தொழுதாள்; ஆடினாள்; பாடினாள். பித்துப் பிடித்தவள் போல் ஆனாள். ''அன்னையே அன்னையே'' என்று அழைத்து அலறினாள்.

உமாதேவி, கருணைமழை பொழிந்து, ''குழந்தாய்! உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள். தருகின்றேன்'' என்று அருள்புரிந்தனர்.

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

**மயில் தகர்கலிடையர்:—**

தகர்—ஆடு. கல்—மலை. இடையர்—அதன் இடையே வாழ்பவர்; வேடர்.

**குறமகளை வந்தித் தணைவோனே:—**

வள்ளியை ஞான பண்டிதன் வந்தித்தான் என்பதன் உட்பொருள் ஆன்மாவின் மீதுள்ள கருணையால் தனது உயர்வை ஒரு பொருளாக எண்ணாமல் இரங்கி வந்து எளிதாக நின்றான் என்பதாகும்.

**கயிலைமலையனைய செந்தில்:—**

திருச்செந்தூர் திருக்கயிலாயம் போன்ற உயர்வுடையது. ''பரமபதமாய செந்தில்'' என்றும் பிறிதோரு திருப்புகழில் கூறியுள்ளார்.

### கருத்துரை

**வள்ளி நாயகரே! செந்திற் குமாரரே! தேவரீரை அடியேனுடைய உள்ளத்தில் அறிய அன்பைத் தருவீர்.**



மாதரசி, ''என்தாயே! அகில உலகங்களையும் படைத்து அளித்து அழிக்கும் பராசக்தியே! உன் அருள் இல்லையானால் உலகமில்லை. என் அம்மே! என் கணவனை எனக்குத் தந்து அருள்புரிவாய்'' என்று வேண்டினாள்.

கௌரி, ''குழந்தாய் உன் கணவனுக்கு அற்ப ஆயுள். அவன் நேற்று மாலை காசியில் மாண்டு போனான். மாண்டவன் மீண்டு வாரான். வேறு ஒன்றைக் கேள். தருவேன்'' என்று அருளினார்.

மாதரசி, ''அம்மா! என் கணவனார் உயிர் துறந்தனரா? அவரை எழுப்பியளிக்க உன்னால் ஆகாதா? வேதாகமங்கள் யாவும் உன்னைப்பற்றிக் கூறுவது பொய்யா? நித்ய கல்யாணி. உன்னை நம்பித் தவஞ்செய்த யான் கணவனையிழந்து உயிர் விடலாமா? இது நின் கருணைக்கு அழகா. அகிலாண்ட நாயகீ; ஒளிமருவு நினது திருவருள் உற்றால் சிறுதுரும்பும் இந்த உலகங்களைப் படைத்தளித் தழிக்குமே? நீ தந்த கரும்பையும் அரும்பையும் கொண்டு மன்மதன் இரும்பையுங் கரையுமாறு ஆட்சி புரிகின்றான். வேல் கொடுத்தாய் செந்திலாண்டவருக்கு. பால் கொடுத்தாய் பரசமய கோளரிக்கு. எனக்கு மங்கல நூல் கொடுக்க உனக்குச் சக்தியில்லையா? தேவீ! உன் கருணைக் கண் பட்ட இடம் பாலைவனம் சோலைவனம் ஆகுமே? அம்மா! உன்னைத் தெரிசித்த பிறகு எனது வினை இடிந்து பொடிபடாமல் இன்னும் இருக்கின்றதா? சாம்பலாகப் போன மன்மதனை எழுப்பி இரதிக்குத் தந்த கருணாம்பிகை! என் கணவனைத் தந்து காப்பாற்றுவாய்'' என்று கைகூப்பிக் கண்ணருவி சொரிந்து மலர்க் கொடிபோல் நின்றாள்.

''குழந்தாய்! வருந்தற்க. அருள்புரிந்தேன். உன் கணவன் உயிர் பெற்று எழுந்துவிட்டான். விரைவில் உன் பால் வந்து சேருவான். வள்ளியும் முருகனும் போல் வற்றாத வளமையுடன் வாழ்வீர்களாக'' என்று அருள்புரிந்து மறைந்தருளினார் உமாதேவியார்.

மாதரசி மட்டற்ற மகிழ்ச்சியுற்றாள். ஆனந்தக் கூத்தாடினாள். தவத்தை முடித்துக்கொண்டாள். தாய் தந்தையரைத் தொழுது, தன் தவம் பலித்துவிட்டது என்று மட்டும் பொதுவாகப் புகன்றாள்.

* * * *

காட்டிலே குராமரத்தடியிலே மாண்ட சதானந்தன் மறுநாள் விழித்து எழுந்தான். தான் புண்ணிய வுலகிற் சென்றபோது சிவதூதர்கள் வந்து ''பராசக்தியின் உத்தரவு; சீக்கிரம் வா. இன்னும் சிலகாலம் நிலவுலகில் இருக்கவேண்டும்'' என்று கூறி தன்னை இழுத்து வந்து உடம்பில் புகுத்தியதாகக் கண்டான். அவை யாவும் கனவு போல் தோன்றியது.

என் சிந்தை மேவிய செல்வர் வருகின்றார். வாருங்கள் அழைத்துவருவோம்'' என்றாள். மந்திரிமகனுக்கு உள்ள காகா வலியைப் போக்க யாரோ ஒரு மகானை யழைத்திருக்கின்றாள் போலும் என்று அவர்கள் கருதினார்கள். குடை, கோடி, ஆலவட்டம், யானை, தேர், குதிரை, அணிகலம், ஆடை, மாலை முதலிய வரிசைகளுடன் எதிர்கொண்டாள்.

மந்திரியும் தன் மகனை அழைத்துக்கொண்டு வந்தான். தன் மகனுடைய காகாவலியை மாற்ற யாரோ வருகின்றார். காகாவலி போய்விட்டால் தன் மகனுடன் அரசகுமாரி வாழ்வாள் என்று மந்திரி பகற்கனவு கண்டு வந்தான்.

அரசகுமாரி அருந்தவ மணியாகிய சதானந்தன் அடிமலர் மீது வணங்கினாள். சதானந்தன் அவளது தவக் கோலத்தைக் கண்டு இறும்பூதுற்றான். அன்று மணமகளாகக் கண்டான். இன்று தவமகளாகக் காண்கின்றான். அத் திருவாளனை மீளவும் பல்லக்கில் ஏற்றி அரசவைக்கு அழைத்துவந்தாள் மாதரசி.

சிறந்த அரியணை மீது அமர்த்தினாள். பொற்றும்பாளத்தில் அவன் அடிமலர்களை வைத்துப் பாதபூசை செய்தாள். அந் நீரை உண்டாள். ஆனந்தங் கொண்டாள்.

மந்திரிக்கு அடையாளம் நன்கு புரியவில்லை. யாரோ ஒரு சாமியார் என்று மட்டும் எண்ணினான். இரவிலே அன்று கண்டதுதானே?

மாப்பெருங் கூட்டம்; ராஜ சபை; எல்லோரும் இமை கொட்டாது வந்த தவக்குமாரனை நோக்கி நின்றார்கள். மாதரசி அவனை நெருங்கி, ''என் உயிர்த் துணைவரே! உத்தம நாயகரே! மாண்டு பிழைத்து மீண்டு வந்த தங்களுக்குப் பல கோடி வணக்கம். இனி என் வாழ்வு தழைத்தது. ஒரு குறையும் இல்லை. இனி என் உயிர் உடம்பு செல்வம் இந்த நாடு நகர் எல்லாம் தங்களுடையவை'' என்றாள்.

மகளுடைய சொல்லைக் கேட்ட மன்னன் வீரசேகரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. என்ன நமது புதல்விக்குப் பித்தமா? யாரோ ஒரு சந்யாசியைத் தன் உயிர் நாயகன் என்கின்றாளே; இது பெண்ணறத்திற்கே பெருங் கேடல்லவா? மந்திரி குமாரனுக்குக் காகாவலி என்பதற்காக அவனை வெறுத்து ஒருவனை விரும்பலாமா? என்றெல்லாம் எண்ணி குறுகுறு என்று விழித்தான். சபையோர்களும் அப்படியே பலப்பல எண்ணித் திகைத்து நின்றார்கள். மந்திரியும் மந்திரிமகனும் பகைத்துநின்றார்கள். இவர்களைக் கண்ட மாதரசி நகைத்து நின்றாள்.

ஓடிப்போ என்று என்னை விரட்டிவிட்டீர்கள். இதுதான் நடந்தது'' என்றான்.

இதனை மன்னவன் கேட்டு சீற்றமுற்றான். மாதரசி சதானந்தனை நோக்கி, ''பெருமானே! என் கழுத்தில் திருப்பூட்டியது யார் என்பதைத் தாங்கள் உரைத்தருளும்'' என்றாள்.

சதானந்தன், ''வேந்தர் பெருமானே! நான் ஆதிசைவர் மரபில் வந்தவன். பிறந்த ஊர் திருத்தணிகை. என் பிதா சிவராஜ குருக்கள். எனக்கு ஜோதிடக் கணக்கின் படி ஆயுள் பதினாறு ஆண்டுகள்தான். என் பிதா பிரபல ஜோதிடர். எனக்கு ஆயுள் இல்லையே என்று வருந்தினார். அவருக்கு நான் என் வாக்கின் வலிமையால் ஆயுள் உண்டு என்று கூறிவிட்டு, அவர்கள் முன் மரணமடையக் கூடாது என்று எண்ணி காசி யாத்திரைக்காக வந்தேன். மந்திரியார் தன் மகனுக்குக் காகா வலி வருவதனால் அவருக்குப் பதிலாக என்னைத் தங்கள் புதல்விக்குத் திருமாங்கல்யம் தரிக்குமாறு வேண்டிக் கொண்டார். அவர் வேண்டுகோளுக்கு இசைந்து இம்மாதரசியின் கழுத்தில் திருப்பூட்டினேன். அன்றிரவு இவளைத் தீண்டாது தத்துவோபதேசம் செய்தேன். மறுநாள் பதினாயிரம் பொன் பெற்றுக் காசி சென்றேன். அறம் பல புரிந்தேன். குறிப்பிட்ட நாளில் மாண்டேன். தங்கள் மகள் மாதரசியின் தபோபலத்தால் மறுநாள் உயிர்த்து எழுந்தேன். இந்த ஏட்டில் உள்ள மூன்று வினாக்களின் நுட்ப திட்பங்களை திருமணத்தன்று இரவு இந்த உத்தமிக்கு உபதேசித்தேன். இதுதான் நிகழ்ந்தது'' என்றான்.

இதனைக் கேட்ட மன்னர் மனம் மகிழ்ச்சியுற்றது. மந்திரியின் அறியாமை குறித்து வருந்தினான். ''மந்திரி! என்னே உன் மதிநலம்? மகனுக்குப் பதில் வேறு ஒருவன் தாலி கட்டுவதா? மிக நன்றாக இருக்கின்றது; அசட்டுத்தனத்தின் சிகரமாக இருக்கின்றதே. உனக்கும் உன்மகனுக்கும் தீவாந்தர தண்டனை விதித்துளேன். செல்லக்கடவீராக'' என்றான்.

சதானந்தன் மன்னவனை நோக்கி ''என் பொருட்டு இவர்களை மன்னிக்குமாறு வேண்டுகின்றேன்'' என்றான்.

பின்னர், மன்னன் மகள் தன் கணவனைத் தொழுது, ''பிராணபதியே! நான் தங்களைப் பிரிந்த பின் அடைந்த மன வேதனைக்கு அளவு ஏது? அகிலாண்ட நாயகியாம் அம்பிகையை நோக்கி ஓராண்டு தவம்புரிந்தேன். அம்பிகை எனக்குத் தரிசனந் தந்து தாங்கள் மாண்டு போனதாக அறிவித்தார். என் வேண்டுகோளுக்கு இரங்கி தங்களுக்கு உயிர்ப் பிச்சை தந்தருளினார். என்னையாள வந்த இன்னுயிர்த் துணைவரே! இன்று உமது திருவடிகளைக் கண்டு உய்ந்தேன்'' என்று கூறி கண்மழை பொழிந்து அவன் அடிமலர் மீது வீழ்ந்தாள்.

மனைவியை எடுத்து சதானந்தன் வாழ்த்தினுன். மன்னவன் மருமகனை மார்புடன் தழுவி "என் குலந் தழைக்க வந்த குணக் குன்றமே! என் தவப் புதல்வியும் இந்த அரசும் தங்களுக்கே உரியவை. என் மாதவம் பலித்தது. இந்த மந்திரியால் நான் மதிகேடன் ஆனேன். திருவருள் தங்களைக் கூட்டிவைத்தது" என்ருர்.

அரசனும் சதானந்தனும் மாதரசியும் அரண்மனை சென்ருர்கள். அரசமாதேவி இந்த நிகழ்ச்சிகளைக் கேட்டு துக்கமும் மகிழ்ச்சியும் அடைந்தாள். மருகரை வரவேற்று உபசரித்தாள். தக்கார்களைப் பல்லக்குடன் அனுப்பி தாய் தந்தையரை சதானந்தன் அழைத்துக்கோண்டான். அவர்கள் அடிமலர் மீது முடியுறப் பணிந்தான். மகனைக் கண்ட மாதா பிதாக்கள் இழந்த புதையலை மீளவும் பெற்றது போல் உவகையுற்ருர்கள்.

சதானந்தன் அவர்களைப் பிரிந்தது முதல், இடையில் மாதரசியை மணந்ததும், காசியில் மாண்டதும், மாதரசியின் மாதவப் பயனுல் அம்பிகையின் அருள் பெற்று மீண்டதும் விரிவாக விளம்பிறுன். அன்னையும் பிதாவும் கேட்டு துன்பமும் இன்பமும் மாறி மாறி யடைந்தார்கள். மகனையும் மருமகளையுந் தழுவி உடம்பும் உயிரும் உணர்வும் குளிர்ந்தார்கள்.

மன்னர் தனது நண்பர்கட்கும் உறவினர்கட்கும் ஒரு பெரிய விருந்து வைத்தனர். எல்லோரும் மணமக்களை வாழ்த்திஞர்கள். மந்திரியை வைதார்கள்.

சதானந்தன் தான் காசியில் ஒரு மகானிடம் அறிந்து வந்த மணிமந்திர மருந்துகள் மூலம் மந்திரி மகனுக்குள்ள காகாவலியைப் போக்கியருளினுன். அவனும் உய்வுபெற்ருன்.

சதானந்தனும் மாதரசியும் உயிரும் உடலும் போல் ஒருமித்து இன்புற்று வாழ்ந்தார்கள். சில ஆண்டுகட்குப் பின் வீரசேகரன் சதானந்தனுக்கு மகுடாபிஷேகம் புரிந்தனர். தன் கணவனுடன் மாதரசி மக்களைப் பயந்து மாண்புடன் நல் வாழ்வில் வாழ்ந்தாள்.

---

## ஆதிவயலூர் வெண்பா அந்தாதி

கூட்டுபெரு மன்பாற் குணங்கெட்ட நாயேனும்
நீட்டுவய லூர்க்கந்தா! நின்மலர்நேர்—தாட்டுணைக்கே
பாட்டிசைத்து நின்றேன் படரவரு மேன்றுயரை
ஓட்டியருள் செய்வாய் உணர்ந்து.

உணர்ந்து வழிநில்லேன் ஓங்கறமுஞ் செய்யேன்
கோணர்ந்து பலமலரைக் கோண்டு—புணர்ந்தபவ
நோயகல அர்ச்சியேன் நோக்குவய லூர்வேளே!
தூயநின் ருள்தான் தோழ.

உ

முருகா

# மானம் பேரிது

எல்லோருக்கும் உயிர் பேரிது என்றே தோன்றும். உயிரையே பேரிதேன்று கருதி ஓம்புவதுதான் உலக இயல்பு. போன்னைப் பேரிதேன்று கருதுகின்றவனும் ஆபத்து வந்த போது ஆயிரம் பதிஞயிரம் மருத்துவருக்குத் தந்து உயிரைக் காப்பாற்ற முற்படுகின்ருன். மனைவி மகன் இவர்கள் மீது எத்துணைப் பிரியம் இருப்பினும் தன்னுயிர்க்கு ஆபத்து வரும்போது அவர்கள் மீதுள்ள பிரியமும் விலகிப்போகும்.

ஆனுல் அந்த உயிரைத் துரும்பு என எண்ணி உயிரை விடுவர். யார்? ஆன்ருேர். அப்படி விடுவது எதன் போருட்டு? மானம் அழிய நேருமாயின் ஆன்ருேர்க்கு உயிர் துரும்பாக மாறிவிடுகின்றது. வானம் பேரிது என்பர் உலக நூல் வல்லார். ஆயினும் வானத்தினும் மானம் பேரிது என்றும், உயிரினும் மானம் பேரிது என்றும் ஆன்ருேர் கூறுவர்.

தன் தலையில் உள்ள ஒரு மயிர் நீங்குமாயின் கவரிமான் உயிரை விடும். அதுபோல் மானம் நீங்க வரின் ஆன்ருேர் ஆருயிரை விடுவர்.

**மயிர்நீப்ப வாழாக் கவரிமா அன்னுர்**
**உயிர்நீப்பர் மானம் வரின்.**

தயரதருடைய அமைச்சர்களைப் பற்றிக் கூறவந்த கம்ப நாடர், "அரிய நூலும் கற்றவர் மானம் நோக்கில் கவரிமா அனைய நீரார்" என்று அழகாகக் கூறுகின்ருர்.

மகாபாரதப் போர் பதினைந்தாவது நாள் மாலை நேரம்; துரோணுசாரியார் கடும் போர் புரிகின்ருர். உச்சிக் காலத்துச் சூரியனைப் போல் ஒளி செய்கின்ருர். அவர் முன் நிற்கும் ஆற்றல் ஒருவருக்கும் இலதாயிற்று. ஊழிக் காலத்து மாருதம் போல் சுழன்று பாண்டவ சேனையை அழிக்கின்ருர். அவருடைய கரவேகத்தையும் சரவேகத்தையும் தடுப்பது அரியதாயிற்று.

அத்தருணத்தில் அவர் மெய்மறந்தாலன்றி அவருக்கு மரணம் வராது. அசுவத்தாமா என்ற பேருள்ள ஒரு யானையைப் பீமன் கோன்ருன். இதனை ஒரு காரணமாகக் கோண்டு அவரை அழிக்க எண்ணிஞர் கண்ணபிரான். அசுவத்தாமா இறந்துவிட்டது என்று அவர் முன் நின்று தருமரைச் சொல்லச் சோன்ஞர். தருமர் அப்படிச் சொல்ல மறுத்தார். கண்ணபிரான், "தருமரே! இதோ பாரும்; ஆயிரம் ஆயிரம் பேர் மடிகின்ருர்கள். துரோணருடைய கடுங் கணையால் பல கோடிப் பேரை மடியாமல் காத்தருளும்போருட்டுக் கூறும். அது போய்யுமன்று. வீமசேனன் கையால் அசுவத்தாமா என்ற பேருள்ள யானை மாண்டது உண்மை. ஆகவே 'வீமன்

மீளவும் சேரமானிடம் புலவரை யனுப்பிவைக்குமாறு கூறும்படி ஒரு தூதனை ஏவினன்.

தூதன் சேரமானிடம் வந்து, "புலவர் பெருமானை அனுப்பி வைக்குமாறு சோழ வேந்தர் விரும்புகின்றார். புலவரை அனுப்பி வையும்" என்றான். சேரன், "புலவர் விரும்பினால் உறையூருக்குச் செல்லட்டும். அவருக்கு இங்கு இருக்கவும், விருப்பம் போல் செல்லவும் உரிமையுண்டு. அவருடைய உரிமையிலே நான் இடைமறிக்கமாட்டேன். அவர் அங்கு வர விரும்பினால் அழைத்துப் போங்கள். போகின்றவரை வேண்டாம் என்று நான் தடுக்க மாட்டேன். இருக்கின்றவரைச் செல்லுங்கள் என்று கூறவும் மாட்டேன்" என்றான்.

இதனைத் தூதர் சோழனிடம் கூறினார்கள். சோழனுக்குச் சீற்றம் பொங்கி எழுந்தது. சோழன் செங்கணானுக்கும் கணைக்காலிரும்பொறைக்கும் கடும் போர் தொடங்கியது. இருதிறத்துச் சேனைகளும் எதிர்த்துப் போர் புரிந்தன. மின்னலைப் போல் வாள்கள் ஒளிசெய்தன. தேர்கள் வாயு வேகத்தில் ஓடி உருண்டன.

இறுதியில் செங்கணான் உருத்திராகாரமாகப் பெரும் போர் புரிந்தான். சேரமான் வலி குன்றியது. அவனுடைய தேரையும் வில்லையும் அழித்து அவனைப் பற்றி சிறையில்அடைத்து விட்டான் சோழன்.

கணைக்கால் இரும்பொறை என்ற சேரர்கோன் உறையூர்ச் சிறையில் வெறுந்தரையில் கிடந்து வாடுகின்றனன். இன்பத்தின் உச்சியில் நின்ற அவன் இப்போது துன்பத்தின் உச்சியில் கிடந்து துடிக்கிறான்.

பொய்கையார் என்ற புலவர் இச் செய்தியை யறிந்தார். அவர் மனம் அளவற்ற வேதனை யடைந்தது. என் பொருட்டல்லவா என் தோழன் இந்த இடர்க் கடலில் விழுந்தான். என்னைப் பிரிய மனமின்றியே போர் புரிந்து நாடு நகர் மாடு மனைவி முதலிய எல்லாவற்றையும் இழந்து சிறையில் கிடந்து துடிக்கின்றான். அவன் சிறையை மீட்பது என் கடன்" என்று கருதினார். அறிவும் அன்பும் நிறைந்த அத் தலைமை சான்ற புலவர் களவழி நாற்பது என்ற அரிய நூல் ஒன்றைப் பாடினார். சோழனிடம் வந்தார். புலவரைக் கண்டு சோழ வேந்தன் அன்போடு வரவேற்றான். உபசரித்தான்.

களவழி நாற்பது என்ற நூலை அவனுக்கு முன் பாடினார். அதனைக் கேட்ட சோழன் பெரிதும் மகிழ்ந்தான். பொன்னும் மணியுந் தந்து அவரைப் பாராட்டினான். புலவர் "சோழர் குலம் வாழவந்த வேந்தர் பெருமானே! எனக்குப் பொன்னும் மணியும் வேண்டாம். என் உயிரனைய உத்தமத் தோழன் சேரமானை விடுவிக்க வேண்டும்" என்று வேண்டினார். சோழன்



உள்ளம் உருகியது. 'அப்படியே விடுவிக்கின்றேன். வாருங்கள்' என்று புலவர் பெருமானுடன் சிறைச்சாலை சென்றான்.

சிறையிலிருந்த சேரமான் சிறைச்சாலைக் காவலனைநோக்கி! "அப்பா! நீர் விடாயால் நா உலர்ந்துவிட்டது. சிறிது நீர் கொடு" என்றார். அறிவிலியாகிய அக் காவலன் நீர் கேட்பவர் ஒரு மன்னன் என்பதனையும் அறிந்தானில்லை. கற்பூர மணத்தைக் கழுதை யறியாதன்றோ? மன்னர் பெருமையை மடையன் எப்படி அறிவான்? நிருபன் நீர் கேட்க அம்மூடன் எருமை யசைவது போல் மெல்ல அசைந்து சென்று கழுவாத ஒரு பாத்திரத்தில் நீர் கொணர்ந்து இடக் கரத்தில் நீட்டினான்,

இதனைச் சேரமான் கண்டார். அவர் சிறந்த மானி. ஒப்பும் உவமையும் இல்லாத அவர் பெருமை எங்கே? காவலனுடைய சிறுமை எங்கே? கண் காட்டினால் ஆயிரம் ஆயிரம் பேர் கைகட்டி வாய் பொத்திப் பணிவிடை புரிவார்களே. அத்துணைப் பெருமிதமான பெருவாழ்வில் வாழ்ந்தவரல்லவா அவர்? சிறையில் பெருமையிழந்து அருமையின்றி நீர் விடாயால் வாடினார். பொற்கிண்ணத்தில் தீம்பால் ஏந்தி இளமகளிர் நிற்க, அதனை உண்ணாது அரியணை மீது வாழ்ந்தவர், அவர். ஒரு ஏவலன் கழுவாத பாத்திரத்தல் நீர் கொணர்ந்து அசட்டையாக இடக்கரத்தில் நீட்ட அதனை உண்டு வாழ மனம் இடந்தருமா அவருக்கு? உயிர் வாழ்க்கையை வெறுத்தார். நீர் வாங்க மறுத்தார். சிவனே என்று கண்களை மூடினார். உடம்பாகிய சிறையிலிருந்து அவர் உயிர் விடுதலை பெற்றுப் பிரிந்தது.

பொய்கையாரும் செங்கணானும் சிறையிலிருந்து விடுவிக்க அதே சமயம் உள்ளே நுழைந்தார்கள். சிறையிலிருந்து விடுவிக்கு முன் அவர் உடற் சிறையிலிருந்து விடுபட்டார். நீர் ஏந்திய கையுடன் ஏவலன் நிற்கின்றான். காவலன் அவன் மூலம் நடந்ததைக் கேட்டு அறிந்தான். கண்ணீர் பெருகியது. உள்ளம் உருகியது.

இந்த நிகழ்ச்சியைக் கண்ட பொய்கையார் நண்பரை அணைத்துத் தழுவினார். அவர் உடம்பில் உறைந்த உயிர் நண்பர் உயிரை நாடத் தொடர்ந்து நீங்கியது. என்னே நட்பின் தகைமை? இதனைக் கண்டான் சோழன். நண்பர் மாண்டதற்காகத் தானும் உடன் மாண்ட இப் புலவரைப் பிரிக்க எண்ணின தனது அறியாமையைக் குறித்து வருந்தினான். அலட்சியமாகத் தந்த நீரை வாங்கிப் பருகி உயிர் வாழ விரும்பாது மானத்தினைப் பெரிதாக மதித்து உயிர் விடுத்த சேரமானுடைய மாண்பை எண்ணி வியந்தான்.

உயிரினும் மானம் பெரிதென உணர்ந்தான். மானத்தின் பெருமையை நோக்கி இறும்பூது அடைந்தான். நட்பின் தகைமைக்கும் மானத்தின் மாண்புக்கும் வணங்கினான்.

உ

முருகா

# தவளையின் அன்பு

பாண்டவர்கள் வனத்தில் வசித்துக்கொண்டிருந்தார்கள். அரண்மனையில் சந்தனமரக் கட்டிலில் பஞ்சணையில் படுத்து உறங்கிய அவர்கள் மரத்தடியில் கல்லணையில் படுத்துக் கண்ணுறங்கினார்கள். அறுசுவை யுணவை மறுசிகை நீக்கியுண்ட அவர்கள் காயுங் கனியுங் கிழங்கும் இலையும் உண்டு, சுனைநீரைப் பருகினார்கள். விதியின் விளையாடல். ஊழிற் பெருவலி யாவுள? மற்றொன்று சூழினும் ஊழ்முந்துறும். ஊழை வென்றார் ஒருவருமில்லை.

பாஞ்சால ராஜகுமாரியாகிய திரௌபதியும் அக் கானகத்தில் போனகமின்றித் துயருழந்தாள். அவ் வனவாசத்தில் அவர்களுக்கு எய்திய இடர்கள் பல. அத்துணை இடர்களையுந் தாங்கிச் சாந்தியாக அவர்கள் வாழ்ந்ததற்கு மூலகாரணம் சிவ சிந்தையேயாகும்.

இவ்வாறு வாழ்கின்ற காலத்தில் வீமசேனனுக்குத் "தன்னினும் தோள்வலி படைத்தார் ஒருவரும் இலர்" என்று ஒரு செருக்குத் தோன்றியது.

திரௌபதிக்குத் தனக்குக் கிருஷ்ண பக்தி நிறைந்திருப்பதாகவும் தன்னினும் மேம்பட்ட பக்தர் இருக்க முடியாதென்றும் ஒரு செருக்கு இருந்தது.

உயிர்கள் தோறும் உறையும் கண்ணபிரான் இதனை யறிந்தார். இத் தருக்கை முளையிலே களையவேண்டும் என்று திருவுளங் கொண்டார்.

மெல்லக் கால்நடையாக நடந்தே வந்து பாண்டவர்கள் வாழும் வனத்தை யடைந்தார். பாண்டவர்களும் திரௌபதி தேவியும் எதிர்கொண்டு பரிவுடன் அழைத்து வந்து காயுங் கனியுந் தந்து உபசரித்தார்கள்.

திரௌபதி, "அண்ணா! தேர் யானை பரி முதலிய ஊர்திகள் பல இருந்தும் ஏன் இபபடி நடந்து வந்தீர்கள்? தங்கள் திருவடி நோகவில்லையா? வேதங்களும் முனிவர்களும் தேவர்களுந் தேடிக் காணாத திருவடி சிவக்க இப்படி நடக்கலாமா? அண்ணா!" என்று கனிவுடன் கூறினாள்.

கண்ணபிரான், "அம்மா! உடல் நலங் கருதி ஊருக்கு வெளியே வந்து சற்று உலாவிக்கொண்டிருந்தேன்? உங்கள் நினைவு வந்தது. உங்கள் மீதுள்ள அன்பு என்னை ஈர்த்தது. நடந்தே வந்துவிட்டேன். உங்களைப் பார்த்தவுடன் வலி நீங்கிவிட்டது. நீங்கள் என் அன்பின் சொரூபங்கள் அல்லவா" என்றார்.